*Muslim muracu*
*Malar 9, ital 7*
*January 1957*

Record no. 215

## நாகரிகமான தோற்றம்
## நளினமான தயாரிப்பு

பல நவீன இயந்திரங்கள் புயல் வேகத்தில் உற்பத்தி செய்யும் மில் துணிகளின் வியாபாரத்தையே மந்த மடையச் செய்து சவால் விடும் வகையில், மக்களில் ஒரு சாரார் எப்போதும் கைத்தறி நெசவுகளையே விடாப்பிடியாக ஆதரித்து வந்திருக்கிறார்கள். இதற்குக் காரணம்—தொழில் நுட்பமும், கைத்தறி நெசவில் அநுபவமும் உடையவர்களாக, நளினமும் நாகரிகமும் வாய்ந்த தபால் பெட்டி மார்க் கைத்தறி கைலிகளை அதன் உற்பத்தியாளர்கள் என்றும் மங்காத தரத்துடன் தயாரித்துக் கொடுக்கிறார்கள்

நீடித்த உழைப்பும், மங்காத சாயமும் கொண்ட தபால் பெட்டி மார்க் கைத்தறி கைலிகளை ஆதரிக்க, மக்களுக்குத் தனியாகச் சொல்லவும் வேண்டுமோ ?

## தபால் பெட்டி மார்க்

கைத்தறி கைலிகள்




## M.A. நெய்னா முகம்மத் & கோ

கைத்தறி கைலி வர்த்தகர்கள்

76, லிங்கிசெட்டி தெரு, சென்னை-1.

L. M. Mohideen

# அன்புள்ள ஆசிரியருக்கு

விதவைகளின் கண்ணீரைத் துடைக்க வழி கூறும் இஸ்லாமியக் கொள்கையினை நல்ல முறையில் விளக்கும் "மறுமணம்" (சிறு கதையை) டிசம்பர் இதழில் படித்து மகிழ்ந்தேன்.

எம். எம். சித்தீக்அன்வர்,
புங்கனூர்.

விதவா விவாகத்தை அடிப்படையாகக்கொண்டு எழுதப்பட்ட 'மறுமண'த்தில் வரும் 'நாயுடு மாமா'வை மறக்கவியலாது. கதையின் தமிழ் நடை, பலமுறை படிக்கும் ஆர்வத்தை யூட்டுகிறது.

கே எஸ். சுந்தரம், கொக்கிர
குளம் (நெல்லை)

டிசம்பர் இதழின் தலையங்கம் உள்ளத்தைத் தொடுகிறது. கொண்டவளை மறந்து கண்டவளுடன் திரியும் மதிகெட்ட ஆண்களுக்குச் சரியான சவுக்கடி தந்துள்ளார் "பொற்கொடியாள் நிலையென்ன?" என்னும் கவிதையில் எம். ஷி. எம். ஸுபைர்.

போடி நாயக்கனூர் அ. பக்கீர்
முஹம்மது.

'பொற்கொடியாள் நிலையென்ன?' இக் கவிதை என் மனத்தைக் கொள்ளை கொண்டு விட்டது. இதனை நான் பல முறை படித்தேன். இதுபோன்ற கவிதைகள் மூலம் தெவிட்டாத தனிச் சுவையைத் தரும் முரசு நீடூழி வாழ்க!

எம். ஜமீல், கண்டி, சிலோன்.

டிசம்பர் இதழில் கலீபா மீரான் எழுதிய மறுமணம் என்ற கதையில் பல நல்ல கருத்துக்கள் காணக்கிடக்கின்றன.

டி. ஜே. கனி, சேர்மாதேவி.

முரசில் தொடர்ந்து பிரசுரமாகும் "கீமியாயெ ஸஆதத்" கட்டுரைகள் மனித இதயங்களில் படிந்துள்ள மாசுகளை அகற்றித் தூய்மையான வாழ்வு பெற வழி காட்டுகின்றது.

கே. டபிள்யூ. ஸலாஹுத்தீன்,
மேல் ஆலந்தூர்.

எம். கே. ஜமான் எழுதிய சோலைக்குயில்கள் சொல் நயம், பொருள் நயம் பொருந்த இனிமையாக இருக்கிறது. கலீபா மீரானின் "மறுமணம்" ஒரு சீர்திருத்தச் சித்திரம்.

ஆர். ஜே. எம். முஹம்மது அலீ
ஜின்னா. ஈரோடு.

முஸ்லிம் முரசு வெளியிட்டுள்ள திரு குர்ஆன் நாட்குறிப்பு-1957, போற்றத்தக்க முறையில் அமைந்துள்ளது.

டி. ஏ. அப்துஸ்ஸலாம், ரேலங்கி,
(ஆந்திரா)

தங்கள் 'டயரி' நன்றாயிருக்கிறது.

என். எம் முஹம்மது மீரான்,
நத்தம்.

டிசம்பர் இதழில் 'பொற்கொடியாள் நிலை யென்ன?' என்ற கவிதை கணவனின் கை பிடித்தவளை மாற்றுள் என்று எண்ணுது தங்கையாகவே பாவிக்க, உபதேசம் செய்கிறது. அன்னையைப் பிரிந்த மகனின் நிலையை அழகாகச் சித்தரிக்கிறார் கவிக்குஜ்ஜமான்.

டி. எம். எம். தாஜுத்தீன்
அபிவிருத்தீஸ்வரம்.

திரு குர்ஆன் நாட்குறிப்பு கிடைக்கப் பெற்றோம். இஸ்லாமிய மாதக் காலண்டர்கள் ஒரு சில இருப்பினும் இம்மாதிரி தினக் குறிப்பு இல்லாதிருந்தது ஒரு குறை. அக்குறையை நீங்கள் நிவர்த்தி செய்ததற்காக உங்களைப் பாராட்டுகிறோம்.

எஸ். ஏ. சீ. முஹம்மது இப்ராஹீம்
போல்கவேலா (சிலோன்)

# செய்திக் கதிர்

## இந்தியா-பாக்கிஸ்தான்

பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கு மிடையே தபால மணியார்டர் போக்கு வரவு இவ்வருடம் ஏப்ரல் மாதத்தில் ஆரம்பமாகலாமென்று தெரிய வருகிறது.

28—12—56

## பொதுத் தேர்தல்

இன்னும் இரண்டு மாத காலத்தில் இந்தியாவில் நடைபெறவிருக்கும் பொதுத் தேர்தல்களில் பாராளு மன்றத்து (லோக சபை) க்கு 500 பிரதிநிதிகளையும். 13 ராஜ்ய சட்ட சபைகளுக்கு 3102 உறுப்பினர்களையும் நாட்டு மக்கள் தேர்ந்தெடுத்து அனுப்புவார்கள். ராஜ்யங்களின் புதிய அமைப்புப் படி மொத்தம் 2518 தேர்தல் தொகுதிகள் இருக்கும். இவைகளில் 1934 ஒற்றையங்கத்தினர் தொகுதிகளும், 584 இரட்டை அங்கத்தினர் தொகுதிகளும் இருக்கும் ஒற்றையங்கத்தினர் தொகுதிகளில் 104 ஸ்தானங்கள் தாழ்ந்தப்பட்ட வகுப்பினருக்காக ஒதுக்கி வைக்கப் படும்.

சென்னை (தமிழ் ராஜ்யம்) சட்ட சபைக்கு இப்போதுள்ள 189 ஸ்தானங்களுக்குப் பதிலாக, புதிய சட்டசபையில் 205 ஸ்தானங்கள் இருக்கும். இவைகளில் 37 ஸ்தானங்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக ஒதுக்கப்படும். 28—12—56

## ஷேய்க் அப்துல்லா

பாகிஸ்தானுக்கு அமெரிக்கா அளித்துவரும் இராணுவ உதவியின் காரணமாக காஷ்மீர் பிரச்சினையில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டு விட்டதென்றும், காஷ்மீரில் பொது ஜன வாக்கெடுப்பு நடத்துவதற்கான சூழ்நிலை இப்போது இல்லையென்றும் பண்டித நேரு அவர்கள் வெளியிட்ட கருத்தை ஆட்சேபித்து, இப்போது ஜனாப் ஜி. எம். சாதிக்குக்கு ஒரு கடிதம் எழுதியுள்ளார். அக்கடிதத்தில் ஷேய்க் அப்துல்லா கூறுகின்றார்:

"இந்தியாவுக்கு விருப்பமில்லாத ஒரு காரியத்தை மற்றொரு நாடு செய்துவிட்ட தென்பதற்காக, கடந்த கால் நூற்றாண்டு காலமாக காஷ்மீர் மக்கள் நடத்திவந்துள்ள போராட்டத்தின் அடிப்படை உரிமையை மறுப்பது என்ன நியாயமென்று எனக்குப் புரியவில்லை."

"லோக் சபையில் நேரு எதையோ சொன்னார் என்பதால் காஷ்மீரில் வாக்கெடுப்பு நடத்துவதாக உலக அரங்கில் இந்தியா அளித்த வாக்குறுதி அடிபட்டுப் போய் விடாது. இந்தியா தன் உறுதிமொழியைத் தட்டிக் கழிக்க முற்பட்டால் உலக அமைதிக்கு ஒரு பெரிய அபாயமே விளையும்" என்று தற்போது காஷ்மீரில் சிறையிலிருக்கும் ஷேக் அப்துல்லா எழுதியிருக்கின்றார்.

29—12—56

## திருமணம்

தஞ்சை ஜில்லா, ஏனங்குடி கரைப்பாக்கம் ஜனாப் எம். எம். கே. அப்துல் ரஜாக் (மர்ஹூம்) அவர்களின் செல்வப் புதல்வி தாஜுன்னிஸா பேகமுக்கும், மேற்படியூர் ஜனாப் நா. மு. முஹம்மது ஹனீபா அவர்களின் புதல்வர் அப்துல் வாஹிதுக்கும் 13-12-56ல் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

இப்புதுமணத் தம்பதிகள் நீடூழி வாழ்க!

### கேள்வி—பதில்

இந்த இதழில் அன்பனிப்புப் பெற்றவர்வகள்.

1. எம். ஏ. ஜேபுன்னிஸா, திருச்சி, ரூ. 3.
2. டி. ஏ. ரஹ்மான்; கொழும்பு ரூ. 3




அன்பும் இன்பமும் அறிவும் ஆற்றலும்
பண்பும் புகழும் இனிது விளங்க முரசு முழங்கவே!

| மலர் 9 | சென்னை, ஜனவரி 1957<br>ஹிஜ்ரீ 1376, ஜமாதுல் ஆகிர் | இதழ் 7 |
|---|---|---|



முஸ்லிம் முரசில் வரும் கதைகளும் அவைகளிலுள்ள பெயர்களும் யாரையும் குறிப்பிடுவனவல்ல; எல்லாம் கற்பனை!

### சந்தாவுக்கு எழுதும் பாரம்

இந்த பாரத்தைப் பூர்த்தி செய்து, கத்தரித்து, இதன் வலது பக்கத்திலுள்ள விலாசத்துக்கு அனுப்பிவைத்தால் உங்களுக்குத் தவறாமல் முஸ்லிம் முரசு கிடைக்கும்.

மானேஜர்,
முஸ்லிம் முரசு
18, ராமசாமி தெரு,
சென்னை-1.

நான் இன்று ஒரு வருட சந்தா ரூ. 4—8—0 (அயல் நாடு ஒரு வருடம் ரூ. 6. இரண்டு வருடம் ரூ. 11) மணி ஆர்டரில், அல்லது போஸ்டல் ஆர்டராக அனுப்பியிருக்கின்றேன்.

S.L.M. Mohideen Lebbai






# தமிழர்களின் தனிப்பெரு மகிழ்ச்சி!

**ஆனந்த சுதந்தரம் அடைந்துவிட்டது போன்ற ஒரு உணர்ச்சி ஒன்பது ஆண்டுகளுக்கு முன்பு நமக்கு உண்டாகவில்லை. அந்த உணர்ச்சியும் உவகையும் உள்ளக் கிளர்ச்சியும் இன்றுதான் நமக்கு உண்டாகியிருப்பதாக உணருகின்றோம்.**

இப் புத்தாண்டின் துவக்கத்திலே நம் தமிழ் மொழி—தாய் மொழி—ஆட்சி மொழியாகிறதென்ற நற்செய்தியறிந்து தமிழர்கள் யாவரும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியிருக்கின்றனர். ஒன்பது ஆண்டுகளுக்கு முன்பு இந்நாடு அரசியல் சுதந்தரம் அடைந்தபோது கூட தமிழர்கள் இத்துணை மகிழ்ச்சி யாரவாரம் செய்யவில்லை; ஆனந்தக் கடலில் மூழ்கித் திளைக்கவில்லை. தமிழினத்தின் தாய் மொழிப் பற்று வளர்ந்து வருகிறதென்பதற்கு இது ஒரு சான்று.

நம் தாய்மொழி இன்று அரசாங்க மொழியாகின்றது; அரியாசனம் ஏறுகின்றது; தனக்குரிய தகுதியைப் பெறுகின்றது.

"இதில் என்ன புதுமை, வியப்பு?" என்று கேட்கலாம். நாம் எதிர் பாராமல் என்ன நடந்தாலும் அது ஒரு புதுமையாகத் தானே தோன்றும்? வியப்பாகத் தானே விளங்கும்?

தமிழ் நாட்டுக்குத் தமிழ் நாடு என்று பெயரிடத் தயங்குகின்ற நம் அமைச்சர்கள் தமிழையே ஆட்சிமொழியாக ஆக்கத் துணிந்தது ஆச்சரியமல்லவா?

எதற்கெடுத்தாலும் "பார்க்கலாம்" என்று சொல்லிக்கொண்டே, தேவிகுளத்தையும் பீர்மேட்டையும் பட்டப் பகலில் கோட்டைவிட்ட பச்சைத் தமிழரின் அரசாங்கம் தமிழை ஆட்சி மொழியாக்குவதில் இவ்வளவு சுறுசுறுப்புக் காட்டுமென்று நாம் எதிர் பார்த்திருக்க முடியுமா?

தமிழில் கலைச் சொற்களில்லை, ஆட்சிச் சொற்களில்லை, அது

இல்லை, இது இல்லை என்று சொல்லிக்கொண்டே, 'நீந்தத் தெரிந்த பிறகுதான் ஆற்றில் இறங்குவோம் என்று' அசட்டு வாதம் செய்து கொண்டிருக்கும் அனுபவசாலிகளையெல்லாம் நம் அமைச்சர்கள் அலட்சியம் செய்துவிட்டு அபாரத் துணிவுடன் செயலாற்றியிருக்கிறார்களே, அதை நாம் எதிர் பார்த்தோமா?

இவைகளையெல்லாம் அமைச்சர்களிடமிருந்து அறவே நாம் எதிர்பார்க்கவில்லை. அதனால் தான் தமிழ் ஆட்சி மொழியாகிறதென்ற செய்தி நம்மை ஒரே ஆச்சரியத்தில் மூழ்கடித்துவிட்டது!

இதனை அரசியல் வாதிகள் தேர்தல் தந்திரமென்பார்கள் அதைப்பற்றி நமக்கு அக்கறையில்லை. ஆட்சியாளரின் ஆசைகள் எப்படியிருப்பினும் அவர்கள் செய்த காரியம் சிறந்ததல்லவா? நாட்டுக்கு ஏற்றதல்லவா? அதனால் அவர்களை நாம் பாராட்டத்தான் வேண்டும். கல்வியமைச்சர் திரு. சி. சுப்ரமணியம் அவர்களின் பெரு முயற்சியாலும், முதலமைச்சர் திரு காமராஜின் பேராதரவினாலும் தமிழ் மொழி தனக்குரிய பெருமையையும் உரிமையையும் இன்று அடைந்துள்ளது. இவர்களை நாம் வாழ்த்துகின்றோம்.

தன்னைத்தானே கண்ணியப்படுத்திக்கொள்ளத் தெரிந்தவன் தான் பிறரின் மதிப்புக்கும் மரியாதைக்கும் உரியவனாகின்றான். தமிழர்கள் தங்களின்தாய்மொழியை ஆட்சி மொழியாக்கிக் கொண்டதன் மூலம் அவர்கள் தங்களுக்குத் தாங்களே கௌரவம் தேடிக் கொண்டார்கள். இனி தமிழர்கள் எங்கு சென்றாலும் தலை நிமிர்ந்து வாழலாம்; தாழ்வு மனப்பான்மை கொள்ள வேண்டியதில்லை; "யாவரோடும் சரிநிகர் சமானமாக வாழ்வோமிந்த நாட்டிலே" என்று சமத்துவ முழக்கம் செய்யலாம். வாழ்க தமிழ் நாடு! வாழ்க தமிழ் மொழி! வாழ்க நற்றமிழர்!

இத் தறுவாயில் நமக்கு ஒரு ஐயம் எழுகின்றது. தமிழ் ராஜ்யம் ஏற்பட்ட பிறகும், தமிழே ஆட்சி மொழி என்று தீர்மானிக்கப் பெற்ற பின்பும், அதற்குத் தமிழ் ராஜ்யம் என்று பெயரிடுவதற்குத் தடையாக இருப்பதென்ன?

பிற்காலத்தில் தமிழகமும் கேரள ராஜ்யமும் ஒன்றாக இணைந்து தட்சிண ராஜ்யம் உருவாக நேர்ந்தால் அப்பொழுது தமிழ்நாடு என்ற பெயரை மாற்றியமைக்கவேண்டிய கட்டாயம் ஏற்படுமே என்ற கவலை காங்கிரஸ் ஆட்சியாளருக்கு இருப்பதாகத் தெரிகிறது. ஒரு சில தலைவர்களின் கானல் நீராகவும் கற்பனைப் பொருளாகவும் காட்சி தரும் தட்சிணப் ராஜ்யத்துக்காக தமிழ்ப் பெரு மக்களின் தணியாத ஆர்வத்துக்கு அணை போடுவது அநியாயமல்லவா?

தமிழ் நாட்டின் ஆட்சிமொழி தமிழ் ஆன பிறகும் அதனைத் தமிழ்நாடு என்று அழைக்கத் தயங்குவது நியாயமல்ல வென்பதே நம் திடமான கருத்து.




## ராஜாஜி ஒரு இளைஞர்!

சென்ற மாதம் ராஜாஜி அவர்களின் 78-வது பிறந்த நாள் பல இடங்களிலும் தமிழ் மக்களால் பெருமையுடன் கொண்டாடப் பெற்றது. எழுபத்தெட்டு வயதிலும் பதினெட்டு வயது வாலிபரைப்போல் செயலாற்றும் ராஜாஜி நூறு ஆண்டுகள் வாழவேண்டுமென்று தமிழர்கள் விரும்புவதில் வியப்பில்லை.

சிந்திப்பதிலும் செயலாற்றுதலிலும் மட்டுமின்றி, தமது கருத்தை தயவு தாட்சண்யமின்றி எடுத்துக் கூறுவதில் ராஜாஜியிடம் காணப்படும் துணிச்சலும் தன்னம்பிக்கையும் இளைஞர்களுக்கு ஒரு முன் மாதிரியாக விளங்க வேண்டுமென்று நாம் விரும்புகிறோம்.

பல ஆண்டுகளுக்கு முன்பு பாகிஸ்தானைப் பற்றி அவர் வெளியிட்ட கருத்திலிருந்து மாணவர்களுக்கு மத போதனை அவசியம் என்பது பற்றி நேற்று அவர் கூறியது வரையில் ராஜாஜி அவ்வப்போது வெளியிடும் ஒவ்வொரு கருத்தும் மக்களின் சிந்தனைக்கு விருந்தாக அமைந்து வந்திருக்கிறது.

## மாணவர்களும் மதக் கல்வியும்

மாணவர்களுக்கு மதபோதனை அளிக்கப் பெற்றால் வானம் இடிந்து வீழ்ந்து விடும் என்று நம் அரசியல் தலைவர்களிற் சிலர் நினைத்தார்கள். அதனால் பள்ளி மாணவர்களுக்குக் கல்வி நிலையங்களில் மத போதனை அவசியமில்லை என்று மத்திய அரசாங்கம் முடிவு செய்துவிட்டது. இது ஒரு முட்டாள் தனமான காரியம் என்று ராஜாஜி இப்போது சுட்டிக்காட்டுகின்றார்.

ஆக்ரா சர்வகலா சாலையின் பட்ட மளிப்பு விழாவில் நிகழ்த்திய சொற்பொழிவில் இளம் மாணவர்கட்கு மத போதனை அவசியம் என்று ராஜாஜி வலியுறுத்தியிருக்கின்றார்: "இன்று நாடு இருக்கும் நிலையைப் பார்த்தால் எதிர்காலம் எப்படி இருக்குமோ என்ற எண்ணம் எழுகின்றது; இதைப்பற்றி எனக்குப் பெரும் கவலையாக இருக்கிறது. சாதாரண மனிதனை விட சற்று அதிகமான அறிவும் கல்வியும் உடையவர்கள் பணம் சம்பாதிப்பதையே குறிக்கோளாகக்கொண்டிருக்கிறார்கள்; அதற்காக எந்த முறையைக் கையாளுவதற்கும் அவர்கள் தயங்குவதில்லை. எப்படியாவது பணம் சம்பாதித்தால் போதும் என்று எண்ணுகிறார்கள். இத்தவறான வாழ்க்கை லட்சியம் போதாதென்று அலட்சிய புத்தியும் அகம்பாவமும் நாளுக்கு நாள் மக்களிடையே அதிகரித்துக் கொண்டே யிருக்கிறது" என்று ராஜாஜி தமது சொற்பொழிவில் கூறியிருக்கின்றார்.

மாணவர்களுக்கு இளம் வயதில் மத போதனை அளிக்கப்படாமையால்தான் நாட்டில் ஒழுக்கக் கேடுகள் மலிந்துவிட்டன என்று ராஜாஜி நினைக்கின்றார். எந்த வழியிலாவது பணம் சம்பாதிக்க வேண்டும், தேவைக்கு மேல் செல்வத்தைக் குவிக்க வேண்டும் என்ற எண்ணமே மக்களிடம் மேலோங்கி நிற்கின்றது. இதற்குக் காரணம் என்ன? கடவுள் நம்பிக்கையின்மையும், நன்மை தீமைகளைப் பற்றிய கவலையின்மையுமே இந்த இழி நிலைக்குக் காரணம் என்று ராஜாஜி கூறுகின்றார்.

ஆயிரம் வருடங்கள் வாழப் பிறந்தவர்களைப்போல் பணம் சேர்த்தல் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு, பேய்களைப் போல் பறக்கும் மனிதர்களையே இன்று மிக அதிகமாய்க் காண்கின்றார் ராஜாஜி. இக் கவலைக்கிடமான நிலை மாறவேண்டுமானால் பொதுப் பள்ளிக்கூடங்களில் மாணவர்களுக்கு மதபோதனை அளிக்கப்பெற வேண்டுமென்று அவர் கூறுகின்றார்.

மத போதனைகளினால்தான் கடந்த காலத்திலே இந்தியாவில் போரும் பூசல்களும் நிகழ்ந்ததாக சிலர் நினைப்பது தவறு என்று ராஜாஜி தமது சொற்பொழிவில் தெளிவு படுத்தியிருக்கின்றார். ஒரு மதத்தினரின் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் மற்ற மதத்தினர்கள் சரியாக அறிந்து கொள்ளாமையால்தான் அச்சமும் அவநம்பிக்கையும் ஏற்பட்டு அதன் விளைவாகப் போரும் பூசலும் எழுகின்றன. எனவே பள்ளிக்கூடங்களில் மாணவர்களுக்கு இளம் வயதில் மதக் கல்வி அளிக்கப்படுவதால் அவர்களின் ஒழுக்கம் உயர்வதுடன் ஒருவர் மற்றவரை நன்கு புரிந்துகொண்டு தோழமையுடன் வாழவும் வழியுண்டாகின்றது. பெற்றோர் தங்களின் வீட்டிலேயே குழந்தைகளுக்கு மதக் கல்வியை போதிக்கலாம் என்றால், அவர்களுக்காவது அதைப் பற்றித் தெரிந்திருந்தால் தானே குழந்தைகளுக்குக் கற்பிக்க முடியும்! மாணவர்கள் பெரியவர்களான பின்பு பணம் சேர்க்கும் வழியிலேயே அவர்களின் கவனமெல்லாம் சென்று விடுவதால் தங்கள் சொந்த சமய போதனைகளைப் பற்றியோ அல்லது பிற சமய உண்மைகளையோ படித்துத் தெரிந்துகொள்ள அவர்களுக்கு வாய்ப்பும் வசதியும் கிட்டுவதில்லை. ஆகலால், மாணவர்களுக்குப் பள்ளிக் கூடங்களில் மதக் கல்வி அளிக்கப்பட வேண்டியது அவசிய மென்று ராஜாஜி கூறுகின்றார்.

கல்வித்துறையில் காலத்துக்கு ஏற்ற மாறுதல் தேவை என்று ராஜாஜி கூறுவதை முழு மனத்துடன் நாம் ஆதரிக்கின்றோம். மத்திய அரசாங்கமும் ராஜாஜியின் பி. ஸி. ஜி ஊசியைப் பற்றிய கருத்தைப் புறக்கணிப்பது போல் இதனையும் புறக்கணித்து விடக்கூடாது என்று வலியுறுத்திக் கூறுகின்றோம்.

## நன்றி அறிவிப்பு

ஏனங்குடி, கரைப்பாக்கத்தில் 13-12-56 வியாழன் மாலை வெள்ளி இரவு நடைபெற்ற எங்களின் திருமணத்திற்கு வந்திருந்து சிறப்பித்த உறவினர்கள், நண்பர்கள் அனைவருக்கும், உள்நாடு, வெளிநாடுகளிலிருந்து வாழ்த்துச் செய்திகள் அன்பளிப்புகள் வழங்கி வாழ்த்தியவர்களுக்கும் எங்கள் மனமுவந்த நன்றியறிதலையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.



மணமகன்
என். எம் அப்துல் வாஹிது

**என். எம். அப்துல் வாஹிது**
**தாஜுன்னிஸா**

# சிறுகதைப் போட்டி

இப்புது வருடத் துவக்கத்தில் நம் வாசக நேயர்களுக்கும் சிறுகதை எழுத்தாளர்களுக்கும் இன்பமூட்டும் செய்தியொன்றை மிக்க மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

இந்த 1957ஆம் ஆண்டு நடுவே நம் முஸ்லிம் முரசுக்குப் பத்தாம் ஆண்டு துவங்குகின்றது. அதன் நினைவுக்குறியாகவும் இஸ்லாமிய சிறு கதை எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் பொருட்டும் முஸ்லிம் முரசில் சிறு கதைப் போட்டியொன்று நடத்துவதென்று தீர்மானித்துள்ளோம்.

நாம் சிறு கதைப் போட்டி நடத்துவதற்கு இது முதல் தடவையல்ல. ஏறத்தாழ இரண்டு ஆண்டுகளுக்கு முன், சிறிய அளவில சிறு கதைப் போட்டியொன்று நடத்தினோம். அதில் ஆரம்ப எழுத்தாளர்கள் மட்டுமே கலந்து கொள்ளும் வாய்ப்பு அளிக்கப் பெற்றது. ஆனால், இந்தப் பத்தாம் ஆண்டு சிறு கதைப் போட்டியில்—பழைய புதிய எழுத்தாளர்கள் என்ற வேற்றுமையின்றி எல்லாரும் கலந்து கொள்ளலாம். இப் போட்டியைப் பற்றிய விபரம் இந்த இதழின் இன்னொரு பக்கத்தில் பிரசுரிக்கப் பெற்றுள்ளது.


## முஸ்லிம் முரசு

**சந்தா விபரம்**

(ஈத், மீலாத் மலர்களுடன்)

**உள் நாடு**

**இந்தியா, சிலோன்**

| | |
|---|---|
| தனி இதழ் | 0 6 |
| ஒரு வருடம் | 4 8 |
| அரை வருடம் | 2 8 |
| 2 வருடம் | 8 8 |

**வெளி நாடுகள்**

| | |
|---|---|
| தனி இதழ் | 0 8 |
| ஒரு வருடம் | 6 0 |
| 2 வருடம் | 11 0 |

ஒரு வருடத்திற்குக் குறையாத சந்தா செலுத்துகிறவர்களுக்கு மட்டுமே ஈத், மீலாத் மலர்கள் குறைந்த விலைக்கு அனுப்பப்படும். இலங்கை நேயர்கள் வி.பி மூலம் சந்தா செலுத்தலாம்.

★

**விளம்பர விகிதம்**

| | | |
|---|---|---|
| முழுப்பக்கம் | ரூ. | 50 |
| அரைப் பக்கம் | ,, | 25 |
| கால் பக்கம் | ,, | 15 |
| அட்டை 2-வது பக்கம் | ,, | 70 |
| ,, 3-வது பக்கம் | ,, | 60 |

★

**விவாகம் முதலான செய்திகள்**

| | | |
|---|---|---|
| அரைப் பக்கம் | ரூ. | 20 |
| கால் பக்கம் | ,, | 10 |

மானேஜர்,
முஸ்லிம் முரசு
18, ராமசாமித் தெரு, மண்ணடி
சென்னை-1.

**மு**ஸ்லிம் முரசின் 10-ஆம் ஆண்டு பற்றிய மற்றுமொரு மகிழ்ச்சியூட்டும் செய்தியை நேயர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். 10-ஆம் ஆண்டின் நினைவாக இறைவனருளால் நாம் வெளியிடவிருக்கும் சிறப்பு மலர் பற்றிய செய்திதான் அது. இச் சிறப்பு மலர், நம்மால் வழக்கமாக வெளியிடப்பெறும் ஈத், மீலாத் மலர்களைவிட அளவில் பெரியதாகவும் அதற்கேற்ற விலையுள்ளதாகவும் இருக்குமென்று அறிவித்துக் கொள்ளுகின்றோம். இதைப் பற்றிய முழு விபரங்களும் உரிய காலத்தில் அறிவிக்கப்படும்.

கடந்த பல ஆண்டுகளாக இஸ்லாமிய சிறு கதை இலக்கியத் துறையில் முஸ்லிம் முரசு ஆற்றி வந்துள்ள இனிய தொண்டு பற்றி வாசக நேயர்கள் பாராட்டி எழுதும் கடிதங்கள் நமக்கு மகிழ்ச்சியூட்டுகின்றன. அந்த மகிழ்ச்சியின் அறிகுறியாகவே இச்சிறு கதைப் போட்டியை வெளியிட்டுள்ளோம்.

இனிய இஸ்லாமிய போதனைகளையும் கலாச்சாரத்தையும் அடிப்படையாகக் கொண்டு அமைக்கப் பெறும் சிறு கதைகளுக்கு இப் போட்டியில் முதலிடம் அளிக்கப் பெறும் என்று உறுதி கூறுகின்றோம்.

இந்த இரண்டாவது சிறு கதைப் போட்டி நடத்தவும், பத்தாம் ஆண்டு சிறப்பு மலர் ஒன்று வெளியிடவும் துணிவு கொள்ளுமாறு நமக்கு அருள் புரிந்த அல்லாஹ்வைப் போற்றுகின்றோம்; ஆதரவாளர்களை வாழ்த்துகின்றோம்.

## அட்டைப் படம்

இந்த ராஜ்யத்தின் எதிர்கால ஆட்சி மொழி தமிழ் என்று சட்டமியற்றுவதில் எத்தனையோ சங்கடங்கள் இருந்தன. ஆயினும் அவைகளையெல்லாம் பொருட்படுத்தாமல் தமிழே நம் ராஜ்ய ஆட்சி மொழி என்று சட்டமியற்றுவதில் உறுதியும் தன்னம்பிக்கையும் கொண்டு செயலாற்றிய கல்வி நிதியமைச்சர் திரு சி. சுப்ரமணியம் அவர்களை நாம் பாராட்டுகிறோம் என்பதற்கு அறிகுறியாக இந்த இதழின் அட்டையில் அவருடைய உருவப்படத்தை மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம்.

## திருமணம்

திருநெல்வேலி ஜில்லா மேத்தமார் பாளையம் ஜனாப் வி. முஹைதீன் இப்ராஹீம் அவர்கள் குமாரர் **முகம்மது உதுமான் கனீ** அவர்களுக்கும் மீயகான் பள்ளி ஜனாப், கா மூ. செய்யது முஹம்மது அவர்கள் புதல்வி **கதீஜா பீவிக்கும்**, கடந்த 20-11-57ல் மணமகன் இல்லத்தில் சிறப்பாகத் திருமணம் நிகழ்ந்தது.

வாழ்க மணமக்கள்!



மிகச் சிறுவயதிலேயே தந்தையு[illegible] சென்ற தனயன் தாயை நினைந்து, "[illegible] அன்னையே!" என்று உருக்கமான கடிதம் ஒன்று வரைந்திருந்தான் கடந்த இதழில். அதற்கு அன்னை எழுதிய அருமையான கடிதம் இதோ!!

# ஏற்றமுள்ள என் மகனே!

"ஷிஹாதுல்"

★

1. அன்புள்ள என்மகனே!
அகம்நாடுந் திருவுருவே!
என்னிரு கண்மணியே!
எந்தன் குலக்கொழுந்தே!

உன்னழகு மடல்கண்டு
உள்ளம் நெகிழ்ந்ததடா.
உன்னுடைய அன்பென்னை
உவகையி லாழ்த்துதடா.

என்மீது வைத்த பாசம்
எங்கு மறைந்திடுமோ
என்றே நான் பயந்திருந்த
எண்ணத்தை ஓட்டிவிட்டாய்!

2. அன்னையே உன்நினைவால்
அகங்கவன்று வாடலுற்றேன்.
உன்னுருவம் காணுமல்
ஊணுறக்க மிழந்துவிட்டேன்.

நித்திரையி லாழ்ந்துவிட்டால்
நீயெதிரில் தோன்றுகிறய்
இத்தரையி லுன்பிரிவை
என்னுள்ளம் தாங்கிடுமோ?

படிப்பினிலே கவனமில்லை.
பாடமும் பதியவில்லை.
துடித்தேங்கும் என்மனதில்
துயரன்றே நிலைத்துளது.

அன்னையே! உன்னைப்போல்
ஆதரிப்பார் யாருண்டு?
என்றுகேட்கும் உந்தன்மொழி
என்னுளத்தை வாட்டுதடா!

3. சிந்தை கலங்கிடாதே!
சித்தமும் சோர்ந்திடாதே!
தந்தையுனைக் காத்திடுவார்
தக்கபடி வளர்த்திடுவார்
குறையேதும் வைக்கமாட்டார்!
குணக்குன்றும் என்னதிபர்.
முறையான செயல்களாற்றி
முற்போக்குப் பாதை
[செல்வாய்.

அறிவின்சுடரே யுனக்கு
அழிந்திடாத கல்வியூட்டி
நெறியுடனே ஒழுகிவர
நல்லுரையும் கூறிடுவார்!
"அறிவடையச் சென்றிடுவோர்
அதிலிருந்து மீளும்வரை
இறைவழியில் நின்றிடு"
[மென்(று)
இயம்பியுள்ளார் நன்நபியும்.

4. உள்ளம் தளர்ந்திடாதே
உறுதி யிழந்திடாதே.
வள்ளல் நபியுரையை
வாழ்வில் மறந்திடாதே.
என்நினைவைத் தாழ்த்திவிடு.
ஏற்றமுடன் கல்விபயில்.
துன்பமெலாம் நீக்குகின்ற
தூயவனைத் தினம்தொழுவாய்!

முஸ்லிம் முரசு
பத்தாம் ஆண்டு விழா

## சிறுகதைப் போட்டி

| | | |
|---|---|---|
| முதற் பரிசு .... | ரூ. | 200 |
| இரண்டாம் பரிசு .... | ரூ. | 100 |
| மூன்றும் பரிசு .... | ரூ. | 50 |

பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப் பெறும் ஒவ்வொரு சிறுகதைக்கும் வழக்கம் போல் அன்பளிப்பு வழங்கப் பெறும்.

★ இச் சிறுகதைப் போட்டியில் எல்லா எழுத்தாளர்களும் கலந்து கொள்ளலாம்.

★ பொதுவாக சிறந்த கருத்தும், கற்பனைத் திறனும் உடைய சிறு கதைகளே பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப் பெறும்.

★ சிறப்பாக இஸ்லாமிய போதனைகளையும் கலாசாரத்தையும் அடிப்படையாகக் கொண்ட கதைகளுக்கு முதலிடம் அளிக்கப் பெறும்.

★ கதைகள் அனுப்பக்கூடிய கடைசித் தேதி 30—4—57.

ஆசிரியர்,
முஸ்லிம் முரசு
தபாற் பெட்டி எண் : 258
சென்னை-1 (தமிழ் நாடு).




# இஸ்லாமியக் காதைகள்

## உமரின் ஆட்சியில் ஒருநாள்!

தம்பி!

சென்ற இரண்டு இதழ்களில் இஸ்லாமிய போர் வரலாற்றிலே சில புதுமைகளைப்பற்றி எழுதி வந்தேன். அக்கிரமக்காரர்களை அடக்கி ஒடுக்குவதற்காகவும், தற்காப்பின் பொருட்டுமே முஸ்லிம்கள் போர் புரியவேண்டிய அவசியம் அக்காலத்தில் ஏற்பட்டது. அந்தப் போர்களில் பங்கெடுத்துக்கொள்வதற்கு முஸ்லிம்கள் எத்துணை உற்சாகமும் ஆர்வமும் உடையவர்களாயிருந்தனர் என்பதை உலக சரித்திரம் ஒப்புக்கொள்ளுகின்றது. அல்லாஹ்வின் ஆணைக்குப் பணிந்து அவன் பாதையில் அனைத்தையும் தியாகம் செய்ய அந்தக் கால முஸ்லிம்கள் தயாராயிருந்தனர் என்பதில் சந்தேகமில்லை. முஸ்லிம்களின் முன்னேற்றத்திற்கு அவர்களின் தன்னலமற்ற தியாக உணர்வு மட்டும் காரணமல்ல. நீதி, நியாயம், ஈகை, எளியவர் மீது அன்பு முதலான மனிதப் பண்புகளிலும் முஸ்லிம்கள் சிறந்து விளங்கினர் என்பதே அவர்களின் முன்னேற்றத்திற்கு முக்கிய காரணம். இந்த உண்மையை விளக்கும் இஸ்லாமிய சரித்திரக் கதைகளை உனக்குத் தொடர்ந்து எழுதி வர விரும்புகிறேன். இவைகளை இடைவிடாமல் நீ படித்து வருவதால் உன்னிடமும் நல்ல மனிதப் பண்புகள் வளர்ந்து நாடும் சமூகமும் நல்வாழ்வு எய்துமாறு உன் பங்கைப் பூர்த்தி செய்ய உன்னால் முடியும் என்று நம்புகிறேன்.

பல நூற்றாண்டுகட்கு முன்னே இஸ்லாத்தின் மாபெரும் சாம்ராஜ்யத்தின் தலை நகரான மதீனாவில், புகழ்மிக்க உமர் (ரலி)

அவர்கள் கலீபாவாக ஆட்சி செலுத்தி வந்தார்கள். மக்காவிலிருந்து மதீனாவுக்குச் செல்லும் நீண்ட மணற்பாதையின் ஓரிடத்திலே அழகிய சோலையொன்று அமைந்திருந்தது. அச்சோலையினூடே பளிங்கு போன்ற தெளிவான நீரோடையொன்று சல சலவென ஓடிற்று. அவ்வறண்ட பாலைவனத்தில் ஒட்டகங்களின்மீது கடும்பிரயாணஞ் செய்து களைப்புற்று வரும் வர்த்தகக் கூட்டத்தினரும், பிரயாணிகளும் இறைவனது இவ்வழகிய இயற்கை அருட்கொடையைக் கண்டவுடன் அவனுக்குத் தமது நன்றியைச் செலுத்துவர். அவர்கள் தமது ஒட்டகங்களை ஆங்கு நிறுத்திக் கீழிறங்கிச் சுமைகளை இறக்கி வைத்து, அந் நிழற் சோலையில் தங்கி இளைப்பாறிக் குளிர்ந்த நீரைப் பருகிச் செல்வர். அப்பொழுது அவர்களது ஒட்டகங்களும் அவைகள் விரும்பியவாறு அங்கு மிங்குஞ் சென்று அகப்பட்ட புற் பூண்டுகளைத் தின்று பசியைத் தீர்த்துக் கொள்ளும். இச் சோலையில் ஆங்காங்கு சின்னஞ் சிறு குடிசைகள் பல காணப்பட்டன. அச் சோலையின் உரிமையாளரான "ஷேய்க்" என்பவரின் குடியானவர்கள் அந்தக் குடிசைகளில் வசித்து வந்தனர். அப்பூங்காவின் நடுவே ஒரு சிறு அழகிய இல்லம் அமைந்திருந்தது. அதைச் சுற்றிலும் செல்வங் கொழிக்கும் பழந்தோட்டங்கள் செழித்துநின்றன. இந்த இல்லத்திலேதான் அந்த ஷேய்க் வாழ்ந்து வந்தார்.

அப்போது ஒரு நாள் நடுப்பகலில் அவ்வழியே இளைஞனொருவன் ஒட்டகத்தின் மீதுஏறிவந்து இறங்கினான். அதுவரை ஆங்குச் சாந்தியும் சந்துஷ்டியும் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருந்தன. எல்லோரையும் போன்றே அவ்விளைஞனும் அப்பூங்காவில் இளைப்பாறிச் செல்லத் தமது ஒட்டகத்தை விட்டுக்கீழேஇறங்கினான்; ஒட்டகத்தை மேய விட்டான்; ஒரு மரத்தின் கீழே படுத்தான். குளிர்ந்த காற்று ஜில்லென வீசிற்று. அவன் மிகக் களைப்புற்றிருந்தமையால் நெடுந்துயில் அவனை ஆட்கொண்டது. இதற்கிடையே, ஒட்டகமும் தன் னிஷ்டம்போல் பச்சை கண்டவிடமெல்லாம் சென்று மேய்ந்து தனது பசியைத் தணித்துக் கொண்டிருந்தது. துர்ப்பாக்கியம் யாரை விட்டது! இறுதியில் அவ்வொட்டகம் ஷேய்கின் பூங்காவிலே புகுந்து அவரது அழகிய திராக்ஷைத் தோட்டத்தை அழித்துவிட்டது. அத் தோட்டத்தின் காவலர் ஒரு வயோதிகர்; ஆண்டவன் பக்தர். அத்தறுவாயில் அவர் அவ்வூர் மஸ்ஜிதிற்கென ஒரு முஸல்லாவை (தொழுகைக்குரிய ஜமக்காளம்) முடைவதில் முனைந்திருந்தார். சற்று நேரத்தில் அப்பெரியார் எழுந்து நின்று எட்டிப் பார்த்தபோது அவரது முதலாளியின் சொத்துக்களுக்கு விளைந்திருந்த நஷ்டத்தைக் கண்டார். உடனே அவர் தமது கைத்தடியை எடுத்துச் சென்று அம்மிருகத்தை அங்கிருந்து தூரத்தியடித்தார். ஆயினும், சிறிது நேரத்திற்கெல்லாம் அப்பொல்லாத பிராணி மற்றொரு வழியே உள்ளே நுழைந்து விட்டது! இம்முறையும் அவர் அதனை அடித்து விரட்டினார். எனினும், மீண்டும் மூன்றாவது முறையாக அம்மிருகம் தனது நாச வேலையைத் தொடர்ந்து நடத்தியது. இத்தடவை அவ்வயோதிகர் தமது கைத்தடியை ஒட்டகத்தின் மீது வேகமாக வீசியெறிந்தார். அந்த அடி ஒட்டகத்தின் உடம்பிலே மென்மையான பகுதியொன்றில்பலமாகப் பட்டுவிட்டது. உடனே ஒட்டகமும் கீழே விழுந்து இறந்தது.

இங்கு இவ்வளவு நிகழ்ந்தும் ஒட்டகத்தின் உரிமையாளனை இளைஞனோ விழித்தெழவில்லை! அவனது அருமை ஒட்டகத்தின் கதி இவ்வாறு ஆகுமென்று அவன் கனவிலும் நினைத்திருக்க மாட்டான்.

பின்னர் அவன் விழித்தெழுந்தபொழுது சூரியன் வெகுவாகச் சாய்ந்திருந்தது. வெப்பமுந் தணிந்து காணப்பட்டது. எழுந்தவுடன் முஸ்லிம் என்ற முறையில் அவனது முதற் கடமை, பிற்பகல் தொழுகையை நிறைவேற்றுவதல்லவா? எனவே, அவன் அருகிலிருந்த குளிர்ந்த அருவிக்குச் சென்று 'உளூ'ச் செய்து வந்து முஸல்லாவைக் கீழே விரித்துத் தொழுதான்; அப்பாலே வனத்தின் மத்தியிலே அது போன்ற தூர் அடர்ந்த நிழலையும், குளிர்ந்த நீரோடையையும் சுகத்தையும் இளைப்பாறுதலையும் அன்று தமக்கு அளித்துதவியதற்காக அல்லா(ஹ்) வுக்குத் தனது அன்பையும் நன்றியறிதலையுந் தெரிவித்துப் பிரார்த்தனை புரிந்தான்.

தொழுகையும் 'துஆ'வும் முடிந்தவுடன் அவன் மீண்டும் தமது பிரயாணத்தைத் துவங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்த போதுதான் அவனுக்கு ஒட்டகத்தின் ஞாபகம் வந்தது. அம்மிருகம் எங்கும் காணக் கிடைக்கவில்லை. "அஃது எங்குதான் சென்றிருக்க முடியும்?" என அவன் தனக்குள் கூறிக்கொண்டே இங்குமங்கும் தேடித் திரிந்தான். சற்று தூரஞ் சென்று ஷேய்கின் தோட்டத்தில் புகுந்து பார்த்தான். ஆங்கு அவனது அருமைப் பிராணி இறந்து வீழ்ந்து விறைத்துக் கிடந்தது. இக் கோரக் காட்சியைக் கண்ட இளைஞனுக்கு அடிவயிற்றில் அடி விழுந்தாற் போல் இருந்தது. உற்றதோர் உயிர்த் தோழனை நடுவழியிற் பறி கொடுத்தவனைப் போன்று துயரக் கடலில் ஆழ்ந்தான்.

இந்நிலையில்தான், நடந்ததையெல்லாம் இளைஞனுக்கு விளக்கிக் கூறுவதற்குக் காவற்காரப் பெரியார் முன் வந்தார்: "மன்னிப்புக் கோருகிறேன்! மைந்தரே! மன்னிப்புக் கோருகிறேன்! துக்ககரமான இந்நிகழ்ச்சி தற்செயலாக நேர்ந்துவிட்டது. எவருக்கும் எத்தகைய தீங்கும் இழைக்க நான் எண்ணவில்லை. தோட்டத்தை உமது ஒட்டகம் படு

மோசமாக அழித்துக்கொண்டிருந்தது. அதனை வெளியே வெருட்டிவிடவே நான் விரும்பினேன். இரு முறை அவ்வாறே வெருட்டி விட்டேன். ஆனால், மூன்றாம் முறையும் அது மீண்டும் தோட்டத்திற் புகுந்து நாசம் விளைவித்தது. இம்முறையும் வெருட்டிவிடவே அடிக்கப்பட்ட எனது அடி அபாயகரமாக முடிந்து விட்டது. சிறிதும் எதிர்பாராது நடந்துவிட்ட இவ் விபத்துக்காக நான் மிக்க வருந்தி உமது மன்னிப்பைக் கோருகிறேன்" என்று அவ்வயோதிகர் உருக்கம் நிறைந்த சோகக் குரலில் எடுத்துரைத்தார். அவருடைய சமாதானத்தையும் சால்ஜாப்புக்களையும் காது தாழ்த்திக் கேட்க அவ்விளைஞன் விரும்பவில்லை. அவனது கோபம் கண்மண் தெரியாமல் கட்டு மீறிவிட்டது. தலை கால் அறியாமற் சென்ற அவனது சினம் அக்கிழவர் மீது சீறிப் பாய்ந்தது. உருண்டு திரண்டிருந்த அவனது கட்டுமஸ்தான கரங்களின் இரும்புப் பிடியால் அம்முதியோரின் கழுத்தைப்பிடித்து நெருக்கிக் கொண்டே அவன், "ஏ! மூடக்கிழவனே! எனது அருமை ஒட்டகத்தைக் கொல்ல உனக்கு என்ன துணிச்சல்?" எனக் கூறி அவரை ஓர் உலுக்கு உலுக்கித் தள்ளினான். கிழவரது தளர்ந்த தேகம் அவ்விளைஞனின் இரும்புப் பிடியையும், முரட்டுத்தனமான குலுக்கலையும் தாங்க முடியவில்லை. எனவே, அவரது இருதயத் துடிப்பு அக்கணமே 'டக்'கென நின்று விட்டது.

திடீரென மூண்ட கோபக் கனலும் கொந்தளிப்பலையும் தணிந்த பின்னர், அவ்விளைஞன் தான் செய்த தவற்றின் விளைவை ஆரஅமர நின்று கண்ட போது மலைத்துப் போய்விட்டான்; பச்சாத்தாபத்தால் பதறித் துடித்தான். ஒரு தோழரின் ஆருயிரைப் போக்கி, இஸ்லாத்தின் நற்பெயருக்கு நாசம் விளைவித்து விட்டானல்லவா? நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களின் இறுதி ஹஜ்ஜின் போது மக்காவில் விடுத்த பிரிவுரையும், இறுதியுபதேசமுமான அமர சொற்பொழிவு அப்பொழுது முழுக் கவர்ச்சியுடன் அவ்விளைஞனின் மனக் கண் முன் தோன்றியது: "ஏ! எனது தோழர்களே! எனது செய்தியைச் செவி தாழ்த்திக் கேட்பீர்களாக! உங்கள் ஒவ்வொருவரது உயிரும் உடைமையும் மிகப் புனிதமானவை. ஒருவர் மற்றவரின் உயிரையோ உடமையையோ அழித்தொழித்தல் அறவே கூடாது."

மனித குலத்தின் மாணிக்கமான கருணை மூர்த்தியவர்களது இவ்வார்த்தைகள் மணியோசையே போன்று 'கணீர்' 'கணீ'ரென அவ்விளைஞனின் காதுகளில் இப்பொழுது ஒலித்தன. அவமானத்தால் அவனது மனம் குன்றிக் குமுறியது. இஸ்லாத்தின் புதல்வர்களில் தானும் ஒருவனெனக் கூறிக் கொள்ளத் தகுதியற்ற இஸ்லாத்தின் துரோகியென அவன் தன்னைக் கருதினான்; இஸ்லாத்தின் திருநபி(ஸல்) அவர்கள் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் விட்டுச் சென்ற அவர்களது இறுதி நம்பிக்கைக்குத் துரோகம் செய்து ஒரு மனித உயிரை மாய்த்து விட்டது குறித்து மனம் வெதும்பினான். இனி என் செய்வது? நடக்கக்கூடாதது நடந்தே விட்டது! இனி அவர் செய்யவேண்டியது என்னவென்பதே இப்போதைய கேள்வி. அச்சோகச் சம்பவம் நிகழ்ந்தபோது அருகில் எவருமில்லை. அவன் தன் தலை தப்புவதற்கு அவன் அங்கிருந்து மெல்ல நழுவிச் சென்று விடலாமா? இனிஆங்கு நிற்பதென்பது தூக்குமேடையை "வா! வா!" வென வருந்தியழைப்பதற்கொப்பாகுமல்லவா? அவன் இப்பொழுது வேறு என்னதான் செய்வது? இவ்வண்ணம் எண்ண அலைகள் அவன்மனத்தில் மோதிக் கொண்டிருந்தபோது தனது உயிரைக் காப்பாற்றிக் கொள்ள அங்கிருந்து ஓட்டம் பிடிப்பதே ஏற்ற செயலென்று சுயநல எண்ணம் ஓங்கி நின்ற தறுவாயில் அவனது இதயத்தினடியிலிருந்து ஓர் உறுதியும் ஊக்கமும் நிறைந்த குரல் ஊடுருவி வந்தது. "இல்லை! ஒருகாலுமில்லை!" என்றது அக்குரல். "கட்டு மீறிப் பொங்கியெழும் கோபத்திற்கு வசப்படுவது ஒரு முஸ்லிமுக்கு உகந்த செயலன்று. கோபத்திற்கடிமையாக நடந்து கொள்ளுவது பயித்தியக்காரத்தனம். ஆனால் ஒரு பயித்தியம் பிடித்த முஸ்லிம்கூட அற்பத்தனமுள்ள மனிதனைப் நடந்துகொள்ளுதல் கூடாது. நாட்டின் சட்ட விதியினின்றும் தப்பியோடுவது • ஏமாற்றுச் செயலேயாகும். ஏமாற்றுவதென்பது ஒரு முஸ்லிமுக்கு ஏற்ற செயலன்று."

இளைஞன் தனக்குள்ளேயே இப்படிச் சொல்லிக்கொண்டு ஷேய்க்கின் இல்லத்திற்கு ஓடினான். அங்கே ஷேய்க்கைக் கண்டு, "காவற்காரக் கிழவரைக் கொன்ற கொலையாளி யானே!" எனக்கூறி அவரிடம் சரண் புகுந்தான்.

தம்பி! இதற்குப் பின் நிகழ்ந்த சம்பவம் ஒவ்வொன்றும் உன்னை வியப்பில் ஆழ்த்தப் போகின்றது! அவற்றில் வரும் நீதிகளும் போதனைகளும் உன் இதயத்தைக் கவர்ந்து விடுமென்பதில் சந்தேகமில்லை. இன்று நீ ஆர்வத்துடன் படிக்கின்ற எத்தனையோ கட்டுக் கதைகளைவிட விறுவிறுப்பாகவும் வியக்கத்தக்கதாகவும் இந்த உண்மை வரலாறு இருக்குமென்று உனக்கு உறுதி கூறுகின்றேன். இதனை நீ மட்டும் படிக்கக்கூடாது. உனது நண்பர்களும் படிக்க வேண்டும், தம்பி தங்கைகளுக்கும் படித்துக் காட்ட வேண்டும் என்று விரும்புகின்றேன்.

"நூர்"

# நான் அறிந்த இஸ்லாம்

எஸ். சுந்தரமூர்த்தி

## 27. திரு குர்ஆன் அருளப் பெற்றது.

இஸ்லாமியக் கொள்கைகள், விதிகள் பலவற்றிற்கும் ஊற்றுப் போல் விளங்கும் தோற்றுவாய் திரு குர்ஆன் ஆகும். திரு குர்ஆன் என்ற பெயரே அம் மறை நூலில் பல இடங்களில் வழங்கப்பட்டுள்ளது. மற்றும் அதனிடமிருந்தே திரு குர்ஆனைப் பற்றிய பல செய்திகளையும் நாம் அறிந்து கொள்ளலாம். அதாவது அம் மறை எப்பொழுது, யார் மூலம், எம்மொழியில், எங்ஙனம், ஏன் வெளிப்படுத்தப்பட்டது என்ற பல செய்திகளையும் அதனிடமிருந்தே தெரிந்து கொள்ளலாம். அம் மறை, மகான் முஹம்மது நபி அவர்களுக்கு அருளப்பெற்றது. "முஹம்மது அவர்களுக்கு அருளப்பட்டதில் நம்பிக்கைகொள்ளுங்கள். அது இறைவனிடமிருந்து வந்த உண்மைப் பொருளாகும்" (47 : 2) அது ரமலான் மாதத்தில் ஓர் இரவில் முதன் முதலாக வெளிப்படுத்தப்பட்டது. அவ் இரவு அது முதல் 'லைலத்துல்-கத்ர்' அல்லது "மேன்மை மிக்க" இரவு என்று வழங்கப்படுகின்றது. "குர்ஆன் வெளிப்படுத்தப்பட்ட மாதமே ரமலான் மாதமாகும்" (2 : 185) "நிச்சயமாக நாம் அதை அந்த மேலான இரவில் வெளிப்படுத்தினோம்" (97:1) இது அரபு மொழியில் அருளப்பட்டது. "எனவே எளிமை தோன்ற நாம் அதை உமது மொழியிலேயே இயற்றினோம். யாவரும் இதை கவனிப்பார்களாக" (44 : 58). "நீங்கள் அதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே நாம் அதை ஒரு அரபு குர்ஆனாக இயற்றியுள்ளோம்" (43 : 3). அது சிறு சிறு பகுதிகளாகவே அவ்வப்பொழுது நபி நாயகம் அவர்களுக்கு வெளிப்படுத்தப்பட்டது. வெளிப்படுத்தப்பட்ட பகுதிகள் உடனுக்குடன் எழுதப்பட்டு அவர்களின் தோழர்களால் உடனுக்குடன் மனப்பாடம் செய்யப்பட்டன. அவ் வெளிப்பாடு நபி நாயகம் அவர்



கள் உலகத்தை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்ல முயன்றுவந்த அவர்களுடைய வாழ்நாளின் சுமார் இருபத்து மூன்று ஆண்டுகள்வரை பரவி இருந்தது. "மக்களுக்குச் சிறு சிறு பகுதிகளாக படித்துக் காட்ட எளிதாக இருக்கும் வண்ணம் தெளிவாக இயற்றப்பட்டுள்ளது திரு குர்ஆன்" (17 : 106) தெய்வீகத் தன்மை வாய்ந்த வானவர்களின் உறுதுணையைக்கொண்டு நபி நாயகம் அவர்கள் தாமே இயற்றியது அல்ல அத் திரு குர்ஆன். ஆனால் 'ஜிப்ரயீல்' என்ற வானவரால் நபி நாயகம் அவர்களுக்கு சொற்களாகவே கூறப்பட்டது: அதனை அப்படியே மக்களுக்கு அறிவித்தார்கள் திரு நபி (ஸல்). "நிச்சயமாக இது எல்லா உலகங்களுக்கும் தலைவனான இறைவனிடமிருந்து வந்த ஞான வெளிப்பாடே யாகும். தெளிவாக அரபு மொழியில் கூறின் "நீர் எச்சரிக்கையாளரில் ஒருவராக இருக்கும் பொருட்டே உண்மையுள்ள வானவரால் இது உம் இதயத்திற்குக் கொண்டுவந்திறக்கப்பெற்றது". (26: 192—195) "ஜிப்ரயீலுக்கு யார் பகைவராயினும், நிச்சயமாக அவர் அதை அல்லாஹ்வின் ஆணையின்படியே உம் இதயத்தில் இறக்கி வைத்தார். (2 : 97).

"வஹீ" என்று சொல்லப்படும், ஞானவெளிப்பாடுகள் மூவகைப்படும். அவற்றுள் முதலாவது திடுமெனத்தோன்றும் எண்ணங்கள் ஆகும். இதன்படி மெய்யடியார்களுக்கு ஒரு குறிப்பிட்ட செயலைப்பற்றிய பொதுவான, ஆனால் தெளிவான எண்ணங்கள் அருளப்படுகின்றன. அவற்றைக்கொண்டு அவர் தம் சந்தேகங்களை நீக்கவோ அல்லது நேர் வழியைப் பின்பற்றி நடக்கவோ இயலும். இவ்வகையான ஞான வெளிப்பாடு (வஹீ) சொற்களால் ஆனது அல்ல. இதை தியானத்தின் பயன் என்றும் கொள்ளல் தவறாகும். இரண்டாவது வகை ஞான வெளிப்பாடு கனவுகளும் (ரூயா) உருவெளித் தோற்றங்களும் (கஷ்பு) ஆகும். இவற்றிலிருந்தும் மெய்யடியார்கள் பல உண்மைகளை அறிந்து கொள்வர். ஆனால் மூன்றாவது வகையே மிகச் சிறந்ததும் உறுதியானதும் ஆகும். அதுவே அவ்வடியார்களுக்குச் சொற்களாலாகிய செய்திகளை இறைவன் வானவர் மூலம் அருள் செய்தலாகும். மெய்யடியார்கள் இறைவனுடன் பேசுவர்; இறைவன் அடியார்களிடம் பேசுவான் என்பன இதுவேயாகும். இம் மூன்றும் வகை ஞான வெளிப்பாடு இறைவனால் சிலருக்கு மட்டுமே அருளப்படுவது. மக்களினம் உய்யவேண்டி அவ்வப் பொழுது அவர்களுக்கு அறிவுறுத்த வேண்டிய உண்மைகளை நபிமார்கள் மூலம் இவ்வாறு இறைவன் வெளிப்படுத்துகின்றான். இத்தகைய ஞான வெளிப்பாட்டின் மூலம் அருளப்பட்டதுதான் திரு குர்ஆன். இறைவனுடைய செய்திகளை ஜிப்ரயீல் என்ற வானவர் அவ்வப்பொழுது நபி நாயகம் அவர்களிடம் கொண்டுவந்

தார். அவற்றின் தொகுப்பே திரு குர்ஆன்.

திருநபி அவர்களுக்கு முதன் முதலில் முதல் இரண்டுவகையான வெளிப்பாடுகளே அருளப்பட்டன. பின்னரே குர்ஆன் வசனங்கள் அவர்களுக்கு அருளப்பட்டன. முதன் முதலில் சில தோற்றங்களையே முஹம்மது நபி (ஸல்) கண்டார்கள். ஆனால் அத் தோற்றங்கள் பகலைப்போல் மிகத் தெளிவாக இருந்தன. (புகாரி 1 : 1) அவர்கள் பல சமயங்களில் சில குரல்களையும் கேட்டதாக ஹதீதுகளில் காணப்படுகின்றது.

உயர்தர ஞான வெளிப்பாடு முதன் முதலாக முஹம்மது நபி அவர்களுக்கு அருளப்பட்ட சமயத்தில் அவர்கள் ஹீரா என்ற மலைக் குகையில் இருந்தார்கள். அச்செய்தியைப் பெற்றவுடன் அவர்களுக்கு மிக்க களைப்பினால் உடல்சோர்ந்து விட்டது. "அவ்வானவர் என்னைப் பிடித்துக் கொண்டு நான் களைத்துப் போகும் அளவு அழுத்தினர்" என்று உரைத்ததாக கூறப்பட்டிருக்கின்றது. (புகாரி 1 : 1) நபிகள் திலகம் வீடு சென்றவுடன் ஒரு போர்வையை எடுத்துப் போர்த்துக்கொண்டு சிறிது நேரம் படுத்திருந்த பின்பே அவர்களால் பேச முடிந்ததாம். அது போலவே சில மாதங்களுக்குப்பின் வந்த இரண்டாவது ஞான வெளிப்பாட்டின் போதும் நிகழ்ந்ததாம். பிற்காலங்களிலும் அவ்வானவருடைய சக்தி மிக அதிகமாகவே அவர்கள் பால் காணப்பட்டது. மிகக் குளிரான நாட்களிலும் ஞான வெளிப்பாடுகள் வரும் போது நபி பெருமானுக்கு வியர்வை நெற்றியிலிருந்து வழிந்தோடுமாம்! (புகாரி 1 : 1) மற்றொரு சமயத்தில் நண்பர் ஒருவர் தமது கால்கள் நாயகம் அவர்களின் காலுக்கடியில் இருக்கும் வண்ணம் உட்கார்ந்திருந்தாராம். அப்போது அத்தோழர் தனது கால்கள் முறிந்துவிடுமோ என்று எண்ணக்கூடிய அளவுக்குக் கனமாக இருந்ததென்று அவர் கூறுகின்றார். (புகாரி 8 : 12).

ஞான வெளிப்பாடுகள் முஹம்மது அவர்களுக்கு இரண்டு விதங்களில் அருளப்பட்டுள்ளன. சில சமயங்கள் மணி ஒலித்தல் போல இருந்ததாம். அதுதான் மிகக் கடினமாக இருக்குமாம். வானவர் சென்றபின் அவர் கூறியன யாவும் நாயகத்துக்கு அப்படியே ஞாபகம் இருக்குமாம். மற்றும் சில சமயங்களில் அவ்வானவர் மனித உருவில் வந்து பேசுவார். அவர் கூறுவன யாவும் நபி நாயகத்துக்கு அப்படியேஞாபகம். இருக்குமாம் (புகாரி 1 : 1) அவ்விரண்டு வகைகளிலும் வானவரே நேரில் அவர்களுக்குத் தோன்றினர்; சொற்களாகவே செய்திகளை அவர்களுக்கு அறிவித்தார். அச்சமயங்களில் முஹம்மது நபி அவர்கள் இவ்வுலகத்தை விட்டு வேறு உலகத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டதாகவே உணர்ந்தார்கள். தம் நண்பர்கள் சூழ முஹம்மது அவர்கள் இருந்தபோது பல சமயங்களில் அவர்கள் ஞான வெளிப்பாடுகளைப் பெற்றபோதிலும் அவர்களுடைய நண்பர்கள் எவரும் அவ்வானவரைக் கண்டதும் இல்லை; அவர் சொற்களைக் கேட்டதும் இல்லை. நபி நாயகம் ஒருவர் மட்டுமே அவைகளை உணர்ந்தார்கள். அவற்றிலிருந்து அச்சமயங்களில் நபி நாயகம் அவர்கள் சாதாரணமான மக்களுடைய புலனுணர்ச்சிகளால் அவற்றை உணரவில்லை என்று தோன்றுகின்றது. வேறு ஒருவகை உயர்தர புலனுணர்ச்சியாகவே அது காணப்படுகின்றது. அதனால்தான் அவர்கள் வேறு ஒரு உலகத்திற்கே கொண்டு செல்லப்பட்டதாகவும் சிலர் நம்புகின்றனர்.

(தொடரும்)




“பத்தொன்பது ஆண்டுகளுக்குப் பிறகு தமிழக தரிசனத்துக்காக கப்பலேறிவிட்டீர்கள். இனிமேல் உங்கள் கற்பனைச் சிறகுகளின் அழகிய ஒளி வண்ணங்கள் நமது சஞ்சிகையில் மின்னவேண்டும். அங்கே, தமிழகத்திலே விந்தைக்குரிய நிகழ்ச்சிகளை சிந்தைக்கு விருந்தாக எழுத்தில் வடித்து அனுப்புங்கள்” என்று கேட்டுக்கொண்டார் ‘தமிழகம்’ சஞ்சிகையின் பிரதம ஆசிரியர்.

நான் தலையாட்டிக்கொண்டது உண்மை. ஆனால் அது சாத்தியமா? நானே பர்மாவிலேயே சுற்றிச் சுற்றி கிணற்றுத் தவளையாக உலகத்தைக் கண்டவன். என் தமிழக யாத்திரையில் உடன் வருகிறவரோ சிடுமூஞ்சி; முன் கோபி; இவரிடம் எதையும் வினவி எளிதாகக் கற்பனையை உற்பத்தி செய்வதென்றால் அற்பத்தனமாகவே முடியும். அது எனக்குத் தெரியும். தவிர இவரும் ஜப்பான் ஆக்கிரமிப்புக்குப் பதிமூன்று ஆண்டுகளுக்கு முன் வந்தவர். அதாவது இருபத்து மூன்று ஆண்டுகளை பர்மாவிலேயே கழித்து விட்டார்.

ராமநாதபுரத்திலேயே மனைவியும் இரு புதல்வர்களும் அனாதைகளாக வாழ்கிறார்கள். இத்தனை காலம் அவர்கள் இழிநிலைக்கு இரங்காது இரும்பு இதயத்தோடு இருந்தவர் திடீரென ஞானோதயம் பிறந்து புத்திர பாசத்தால் உந்தப்பட்டு விட்டார். இளைய புதல்வன் கல்யாண பிராயத்தில் இருப்பவனாம்; அவனுக்கு படாடோபமாக கல்யாண வைபவத்தை நடத்தி வைக்கவேண்டுமாம். தந்தையை அறியாமல் வளர்ந்த அவனுக்குப் பிராயச்சித்தமாகுமாம் இந்த ஏற்பாடு. இவற்றையெல்லாம் இவர் என்னிடம் கூறிவிட்டார்.

‘இவர்’ பெயரை இன்னும் அறிமுகப்படுத்தவில்லையே! சொல்லிவிடுகிறேன்; தண்டவாளமாக நீண்ட பெயர்தான்! ‘அப்துல் பாஸித் இப்னு குலாம் தஸ்தகீர் ஸாஹிப்’ என்ற நாமத்தைக் குறுகத் தரித்து ‘தஸ்தகீர்’ என்று சுருக்கமாக அழைப்பர்.

சென்னைத் துறைமுகத்தை வந்தடைந்த ஜலகோபால் கப்பல் பர்மா பிரயாணிகளை வழியனுப்பிக்கொண்டிருந்தது. கப்பலை விட்டு இறங்கிய ஜன சமுத்திரத்தில் நாங்கள் சின்னஞ்சிறு அலை. கஸ்டம்ஸ் நிலையத்தில் கஷ்டத்துடன் கேள்வி கணக்குகளை ஒப்பித்து விட்டு ஒருவாறு காலை நீட்ட வேண்டும் நாங்கள்

தஸ்தகீர் தமது கிருதா கிராப்பைத் தடவியவாறு சொன்னார்:

“பர்மிய சர்க்கார் கொண்டுவர அனுமதித்த நூறு ரூபாய் சர்வ இலக்ஷணத்தோடு இருக்கிறது. கஸ்டப்ஸ்காரர்கள் வரி கிரி என்று சுரண்ட ஆரம்பித்தால் நல்ல நோட்டு நொண்டியாகிவிடும். மிச்சத்தைக் கொண்டு இந்தியாவிலே காலத்தைக் கழிக்கவேண்டுமே?........ டிராப்டுப் பணம் முந்நூறு இருக்கிறது. அது என் மகன் கலியாணத்துக்கு காரியம் பண்ண வேண்டும். அதைத் தொடவே கூடாது. இந்த நூறு ரூபாய் தான் நம் உடைமை என்று நினைத்திருந்தேன். அதுவோ காலொடிந்து, சிறகொடிந்து போகிறதுக்கு நேரம் வந்துவிட்டது.”—

சோக உருவோடு சோர்ந்து நின்றார் தஸ்தகீர். இருபத்து மூன்று ஆண்டுகள் சிரமத்தோடு சம்பாதித்த ஊதியத்தை அந்த நூறு ரூபாய் உருவத்தில் கண்ட அவருக்கு அது கறையான் அரித்துவிட்ட காசாகக் கரைந்து போவதை எண்ணும் போது முத்திட்டு நின்றது கண்ணீர்.

தஸ்தகீரின் சாமான்கள் பரிசோதனைக்கு வந்தபோது காளவாயின் அருகில் நிற்பது போன்ற உஷ்ணம் அவரைத் தகித்தது.

கஸ்டம்ஸ் பரிசோதகராக வந்தவர் இளைஞர். இளகிய உள்ளம் படைத்தவர் என அனுமானிப்பதற்கு முகத்தில் சிறிதும் அடையாளமில்லை. தஸ்தகீர் நினைத்தது போல், சாமான்களை மேலெழுந்தவாரியாகப் பார்க்காமல், குடலைப் பிடுங்கி அலசிய ரீதியிலே பரிசோதித்தபோது அவர் அசந்தே போனார்.

“எண்பத்தேழு ரூபாய் ஆறணா கட்டி விட்டு சாமான்களைத் தூக்கலாம்”—அதிகாரி திருவாய் மலர்ந்தருளினார் இப்படி.

“எ....எ....என்ன? எண்..... எண்....பத்தேழு ரூபாயா? என்ன ஸார்.... குருடனை ராஜ விழி விழிக்கச் சொல்றீர்கள்! தாய் நாட்டைத் தரிசிக்க வந்த இடத்திலே இப்படி”—தஸ்தகீர் குளறினார்.

அலைகடலிலே அசைந்து வந்த கப்பல் அவர் மண்டையோட்டைக் கடலாக்கி பாய்ந்தோடுவது போலிருந்தது. அதிகாரியை ஆண்டவனாக்கி, தன்னைத் தாள் பணிந்த பக்தனாகப் பாவித்து இறைஞ்சி நின்ற நிலை சிவநேசச் செல்வர் பரம்பரையிலோர் நாயனாரை அறிமுகம் செய்து வைத்த மாதிரி இருந்தது எனக்கு.

“என்ன வெவகாரம் பேசி விளையாடறீர்? பணத்தைக் கட்டிவிட்டுப் போய்யானா பழைய பாரதம் படிக்கிறீர்!”

“ஸார். ஒரு விஷயம் தெரிஞ்சுக்கணும்.........அதாகிறது தீர்வைப் பணம் எண்பத்தேழு வருது பாருங்க; அதிலே ஒரு ஐம்பதைக் குறைச்சு முடிச்சிப்பிடுங்க, நீங்க காப்பிச் செலவுக்கு ஒரு பத்து வாங்கிக்குங்க.....பர்மாவிலேருந்து வருகிறவங்க குபேரனுக்குப்பேரனாக வருவதில்லை. குற்றுயிரும்

கொலை உயிருமாக வருகிறோம். தாய் நாட்டைத் தரிசிப்பதற்காகப் பாடுபட்ட பணம் பதினாயிரத்தையும் இமிகிரேஷனுக்கும் கப்பல் காரனுக்கும் வழங்கிவிட்டு தர்வேஷ் கோலமாக வருகிறோம். எங்கள் தலையிலே வரிப்பளுவை ‘ணங்’ன்னு தூக்கி வைத்தால் தலைக் குட்டிச் சுவருக்கு உதாரணமாகும் பாருங்க! ஸார் ஒரு முடிவு....”

கஸ்டம்ஸ் அதிகாரிக்கு கருணை உள்ளம் இருக்குமென்று தஸ்தகீரின் அனுமானம். கல்லிலும் நார் உரிக்கும் கஞ்சனாக இருந்தார் அவர். சட்டத்துக்குப் புறம்பாக நடக்க இசையவில்லை. புருவத்தைச் சுளித்து பூதாகாரமாய் விழித்துப் பார்த்தபோது, தஸ்தகீர் தலை குனிந்துவிட்டார்.

“இந்த புஸ்வாணத்தை வேறெங்கேயும் வைத்துக்கொள்ளும். நீர் சட்டசபையிலே வாதாடி ஒரு முடிவிற்கு வந்த பிறகு நீர் சொன்னது மாதிரி நடந்து கொள்ளலாம். இப்போது சட்டப்படி எண்பத்தேழு சொச்சத்தைக் கட்டிவிடும்” என்றார் அதிகாரி.

எட்டிக் காய்க்கு கசப்பு இன்செக்ஷன் ஏற்றியமாதிரி கசந்தது அவர் வாய்மொழி.

தஸ்தகீர் அசந்து போனாலும் முயற்சியைத் தளரவிடவில்லை.

“பர்மா சர்க்கார், அன்னிய நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாடு முறையிலே இந்தியாவுக்கு அதிகம் கொண்டு வருவதை தடை செய்யும் போது நீங்கள் இப்படி வசூலித்தால் நியாயமா?”

**நிழலும் வெயிலும்**

நிழலின் அருமை வெயிலில் வாடியவனுக்குத் தான் தெரியும் ஓய்வின் இன்பம் கடுமையாக உழைத்தவனுக்குத்தான் புரியும்.

—ஆவ்பரி

தஸ்தகீர் இவ்வாறு பேசுவது விதண்டாவாதமாகவே இருந்தது. இந்த வாதப் பிரதிவாதம் சுவாரஸ்ய கட்டத்தை எட்டும் போது,

“இடியட்! என்ன வம்புப் பேச்சு !”—

ஆஜானுபாகுவான பெரிய அதிகாரி அரை அடி நெருங்கிய போது, தஸ்தகீரின் சப்த நாடிகளும் ஒடுங்கிவிட்டன. பரிதாபகரமாகப் பார்த்தார். “இத்தனை பணத்தை தீர்வைக்காக அர்ப்பணம் செய்தால் என் கதி?” என்ற வினா அவர் முகத்திலே நெளிந்தது. செயற்கரிய ஓர் செயலைச் செயலாற்றத் தயாரானேன் நான். சிறு பிள்ளையைப் பிடித்திழுத்துக்கொண்டு செல்வதும் போல் தஸ்தகீரை பிடித்திழுத்துக் கொண்டு அவர் பில்லை வாங்கிப் பணத்தைக் கட்டினேன். பிறகு சாமான்களை கஸ்டம்ஸ் கட்டடித்தை விட்டு வெளியே கொண்டு வந்தோம்.

தஸ்தகீர் என்னை அதிசயப் பொருளைப் பார்ப்பது போல விந்தையாகக் கவனித்தார்.

எங்கள் சாமான்களை கட்டை வண்டியிலேற்றி தங்கும் விடுதிக்குக் கொண்டு போக ரூபாய் பதினைந்து கேட்டான் ஒட்டை வண்டிக்காரன்.

நஞ்சுண்ட நரி நாக்கைச் சுவைத்து முகத்தைக் கோணிய தினுசாக தஸ்தகீர் எகிறிக் குதித்தார். “நாக்குச் சுளுக்காமல் நாசூக்காக கூலி பேசறியே? கெட்ட கேட்டுக்கு வட்டம் கால் பணம்னு கேள்விப்பட்டிருக்கயாடா? நீதியை நெனப்புவைச்சுக் கேள். அது நல்ல முறை; மருவாதை; அங்கப்ப நாயகன் விடுதிக்கு மூன்று ரூபாய் போதும்.”—என்று முஷ்டியைச் சொடித்து அகங்காரத்தோடு அதட்டினார் தஸ்தகீர்.

வயிறு ஒட்டிய வண்டியோட்டிக்கு வாயடைத்துப் போயிற்று. நான் இடைமறித்து எட்டு ரூபாயாக கூலி பேசி முடித்தபோது, கட்டை வண்டி கடகடவென நகர்ந்தது. ஆனால் தஸ்தகீருக்கு கூலி அதிகமென்று வருத்தம்தான்.

வண்டி முன்னே செல்ல நாங்கள் பின் நடந்தோம். நான் கேட்டேன்: “காசை விணாக்காமல் காபந்து பண்ணுகிறீர்களே, யாருக்காக?”

தஸ்தகீர் கீச்சுத் தொனியிலே நகைத்தார்; சொன்னார்:

“என்ன, தம்பி, உலகத்திலே எட்டாவது அதிசயமாக வினவுகிறாய்!’ முக்கியமாக என் மகனுக்கு கல்யாணம் பண்ணி கண் குளிர கண்டு களிப்பதற்குக் கையிலே காசு வேணுமில்லே? மூத்த பையன்தான் சர்க்காரில் என்ன வேலையோ பார்த்து ஒரு பெண்ணையும் கைப்பிடித்து தனிக் குடித்தனம் பண்ணுகிறானாம்; இளையவன் பசு மாதிரி, அவன் ‘அத்தா இல்லாமல் மணம் செய்வதில்லை’ என்று சபதம் போட்டு விட்டானாம். என் மனைவி எழுதியிருந்தாள் இப்படி. நீர்மோர் குடித்த மாதிரி அவன் மனம் குளிர வேண்டாமா?...தமிழக தரிசனத்திலே அபூர்வமாய் காணும் நிகழ்ச்



சிகளைச் சித்தரிக்க நீயும் கூட வருகிறாய். மகன் கலியாணத்தை விசேஷமாய் நடத்தும்போது அதையெல்லாம் நீ பத்திரிகைக்கு எழுதுவாய் இல்லையா?'' —அவர் நிறுத்தினர்.

வண்டிக்கும் எங்களுக்கும் இடைவெளி தூரமாயிற்று. பசிக்கிறக்கமும் தாக வேட்கையும் எங்கள் நடை வேகத்தைத் தளர்த்தின. வண்டி நீண்ட ரஸ்தாவைக் கடந்து ஓர் திருப்பத்தை அடைந்த போது:—

''டேய் பிடடா! பிடடா! என் தோல் பேகைத் திருடிக் கொண்டு ஓடுகிறுனடா ஒருத்தன்!''—ஏக்கத்தோடு கத்தினர் தஸ்தகீர்.

வண்டிக்காரன் ஸ்தம்பித்தான். நான் அவனைத் தொடர்ந்து தலை தெறிக்க ஓடினேன். கைபேகை கட்கத்தில் இடுக்கிக்கொண்டு காற்றினும் கடினமாக ஓடிக் கொண்டிருந்தான் அவன்.

களைப்பும் ஆயாசமும் ஒருங்கே என்னை ஆக்ரமித்து, உடலைத் தளர்த்தி, ஓட்டத்தின் வேகத்தைக் குறைத்தது.

''விடாதே! பிடி...பிடி!''—

செம்புக் குடத்துக்குள்ளிருந்து வெளிப் போந்த தொனியிலே இவ்வாறு கத்தினேன்; எதிரே வந்த வழிப்போக்கர் இருவர் அவனைப் பின் தொடருவதை என் பஞ்சடைந்த கண்கள் கண்டன. என் எதிரே!—

பூமி அதிர ஓடி வந்த மோட்டார் என்னைத் தடுத்து நிறுத்தி அமுக்கி அறைந்து விழுத்தாட்டியபோது நான் நானுகயில்லை.

நான் கண் விழித்தபோது—ஜெனரல் ஆஸ்பத்திரிக் கட்டிலில் கிடத்தப்பட்டிருந்தேன். கால்களிலும் இடக் கரத்திலும் மணிக் கட்டிலும் கட்டுப் போடப்பட்டிருந்தது. கோடரியால் வெட்டிய மாதிரி உடலிலே தினவு வருத்தியது.

''அம்மா!''—

இந்த உலகத்தில் இல்லாத என் அம்மாவைக் கூப்பிட்டேன். உடல் உபாதை பொறுக்க முடியாத போது பெற்ற அன்னையை அழைப்பது இயற்கை நியதியோ?

மூடிய இமைகளை விழித்துப் பார்த்தபோது என் எதிரே ஒரு தாய்!...ஆம். சிற்பி செதுக்காத அற்புதச் சிலையாக—அணிகலன் அணியாத அணங்கு ஒருத்தி—வெண் துயிலுடுத்தி வெண்ணிலவின் ஒளி வண்ணமாக...

'இலேசான காயம்தான்; அதிர்ச்சியடைந்து விட்டீர்கள்''—அவள்தான் ஆறுதலாகப் பேசினுள்.

''நீங்கள் யார் அம்மணி?''—இந்த அசட்டுக் கேள்வியை நான் ஏன்தான் கேட்டேனே!

''இங்கே பணி புரியும் நர்ஸ். உடம்பை அலட்டாமல் படுத்துக் கொள்ளுங்கள்.'' என்று கூறியவாறு என் இடப்பக்கத்தில் அமர்ந்து கொண்டாள்.

அந்த இன் சொல்லின் இங்கிதத்தை எழுத்தில் வடிக்க முடியாதுதான். காதலால் உள்ளம் நிறைந்த கணவன் அந் நெகிழ்ச்சியின் அனுபவத்தைப் புரிந்து கொள்ள முடியும். தாய்மைப் பண்பின் மாபெரும் சக்தியை அவளிடம் நான் கண்டேன். என் இதய அரங்கத்திலும் புயல் வீசும் ஏதோ ஓர் அதிர்ச்சி. அல்லது மயக்கம்—பொங்கி வருவதைக் கண்டேன்:

'நர்ஸ். வலி தாங்க முடியவில்லை. அத்தோடு தாகவிடாயும் அதிகரிக்கிறதே?''

அவள் சட்டென எழுந்து சிட்டுப்போல் ஓடினுள். ஒரு கணத்திலே பானம் கொண்டு வந்து எனக்குப் புகட்டினுள். கிளாஸில் லோஷன் நெடி மூக்கைத் துளைத்தாலும், அனுயஸமாக விழுங்கும் அல்வா மாதிரி பானத்தை சுவைத்தேன்.

நர்ஸ் போய்விட்டாள். என் மனத்தில் சூன்யம் நிலவியது.

வெளியே அட்டகாசக் கூச்சல் என் செவிகளைத் துளைத்தது. நான் படுத்திருந்த வார்டின் வலப் பக்கத்துச் சாளரத்தை நிமிர்ந்து பார்த்தேன்; அங்கே!—

தோல் பேகைத் திருடிக் கொண்டு ஓடினவனைப் பிடித்துத் தூணேடு கட்டி வதைத்துக் கொண்டிருந்தார்கள். வட்டம் போட்டதுபோல் சிறு கூட்டம், இரு கான்ஸ்டேபில்கள். தலைமை வகித்த ஏட்டு ஐயா அழுக்கு ஏறிப்போன கோட்டுச் சட்டையைக் கழற்றிவிட்டு அவனை அரற்றினர். தஸ்தகீர் தமது ஸ்டாலின் மீசையைத் தடவி கீழ்வாருக முறுக்கிக்கொண்டு சொன்னர்:

''ஏண்டா திவட்டித் தடியா? உன் அப்பன் சொத்துனு நெனப்பு வைச்சு எடுத்துக்கிட்டுப் போனயா? பர்மாவிலேருந்து பாதி மனுஷனுய் வர்ரவங்களை பரதேசி களாக்கிடலாம்னு நெனச்சியா?... உன் பக்கிரித்தனத்தை என் பணத்தைக் கொண்டு மறைச்சுடலாம்னு பார்த்தயா?''—

தஸ்தகிரிடம் ஏட்டு ஐயா வினவினர்; ''தோல் பையிலே எத்தினி ருபா இருந்திச்சு?''

''நூறு ருபா நோட்டு ஒண்ணும், சில்லரையும்...'' என்று பதில் மொழி கூறினர் தஸ்தகீர்.

ஏட்டு ஐயா தமது ஹாட்டைக் கழற்றி வைத்துவிட்டு வாக்கு மூல விசாரணையை ஆரம்பித்தார்:—''தோல் பையை எங்கே ஒளிப்பதற்கு எடுத்து ஓடினே? இவர் நூறு ருபாயை அதில் வைச்சிருக்காருன்னு உனக்கு யார் சொன்னது?''

கட்டுண்டவனின் கண்களி லிருந்து 'சொட்டுச் சொட்டென நீர் வழிந்தோடியது. இளம் வயது; வாலிபத்தின் வளம் உடலிலே ஆங்காங்கே பரவியிருந்தது. பால் பொலியும் முகத்திலே சிறிதேனும் கள்ளம் தேங்கவில்லையே! இவனு திருடிவிட்டான்! அவனைப் பார்த்து ஆச்சரியப்பட்டேன்.

அவன் பதில் மொழி கூறாது ஏட்டு ஐயாவை ஏறிட்டுப் பார்த் தான் பரிதாபமாக.

கயிற்றுக் கட்டை வெட்டிவிட்டு ஏட்டு ஐயா எட்டி உதைத்தார் அவனை. தடாலெனக் கீழே விழப் போனவனை தலையிலோர் அடி கொடுத்துத் தடுத்தாட்கொண்டது கற்றூண்.

"அப்பா!"—வேதனை தாளா மல் வீரிட்டான் அவன்.

"வாயிலே மசால் வடையா வைச்சிருக்கே? கேள்விக்கு பதில் கிதில் சொல்லாமே..."—ஏட்டு ஐயா அட்டகாசமாய்க் கத்தினுர் இப்படி.

"அப்பாவைக் கூப்பிடறியா? அந்த திருடன் உன்னைப் பெற்ற தோசத்துக்காக திட்டுடா! களவா ணிப்பய மவனே...தூ"—தஸ்த கீர் காறியுமிழ்ந்தார் இப்படி.

இச் சொல் அவனுக்கு ஆறாத உடல் ரணத்தோடு ஆற்றாத உள ரணத்தையும் அள்ளிக் கொடுத் திருக்கவேண்டும். முகத்தைச் சுளித்துத் தீர்மானமாகச் சொன் ஞன்: "அப்பாவைப் பற்றி ஏன் அவதூறாகப் பேசுறீங்க?"

"அடி சக்கைடா, அரிச்சந்திர னுக்குப் பொறந்த அசட்டுப் பயலே! எதிர்த்துப் பேசறியா? என்று கூறிக்கொண்டே அடி வைத்தார் தஸ்தகீர்.

அவன் திமிறினுன்.

நெஞ்சுச் சட்டையைப் பிடித் திழுத்து இடைவிடாமல் முகத் திலே குத்து மழை பொழிந்தார். முகம் போஞ்முனையாகி, மூக்கி லிருந்தும் வாயிலிருந்தும் வெளிப் போந்த இரத்தம், கடல் மடை யாக உடைப்பெடுத்து சிறு சிறு வாய்க்காலாகக் கழுத்தைக் கடந்து, தஸ்தகீரின் கையில் வந்து விழுந்தபோது கண நேரம் ஸ்தம் பித்தார்......அது வேதனையோ சோதனையோ அத்துடன் நிறுத்திக் கொண்டார். அவருடைய முஷ்டி யிலே கல்லடிபட்டமாதிரி பல் பதம் பார்த்துவிட்டது.

தாம்பூலம் தரித்தவன் சிவப்பு உமிழ் நீர் பொழிவது மாதிரி உதடுகளை உள்ளடக்கி உமிழ் நீருடன் கலந்த உதிரத்தைக் கொப் பளித்தான் அவன். சலவைக் கல் தரையிலே சட்டென விழுந் தது ஒரு பல்......மூக்கிலிருந்து ஓடிவரும் ரத்தப் பிரளயம் சரியான படி ஒழுகிறதா என்ற தோரணை யில் முழங்காலில் உள்ளங்கை யைப் பதித்துக் குனிந்து மூக்கைச் சிந்தினுன். எல்லாம் இரத்த மயம்.

"வாயை திறடா பார்க்க லாம்?" என்ருர் ஏட்டு ஐயா.

பரிதாபகரமாய்ப் பல்லிளித்தான் அவன். வரிசை வரிசையாக அடுக்கப்பட்டிருந்த முத்துக் கல சங்களில் ஒன்று உடைந்து வீழ்ந்த மாதிரி அந்தப்பல் வரிசைகளில் இடைவெளி தெரிந்தது.

தோல் பை தஸ்தகீரிடம் ஒப் படைக்கப்பட்டது. திருட்டு வாலி பனை போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துப் போய் இரண்டு மாதங்களாவது கம்பி எண்ண வைக்கும் கைங்கரியம் புரிவதற் காக தஸ்தகீரிடம் இருபது ரூபாய் பெற்றுக்கொண்டார் ஏட்டு ஐயா. அப்போதே அவர் என்னிடம் விடை பெற்றுக்கொண்டு தனது ஊருக்குப் புறப்பட்டு விட்டார். நான் சிகிச்சை பெற்றுக்கொண் டிருந்தேன்.

இதைக் கண்ணுற்ற நர்ஸின் களங்கமற்ற முகத்தில் பச்சா தாபம் இழையோடியது.

"இதயம் இல்லாதவர்கள் மனிதர்களாக வாழ்கிருர்கள். ஒரு ஜீவனை இப்படிச் சித்திரவதை செய்கிருர்களே? தாம் பெற்ற மகனை யாராவது இப்படி இம் சித்தால் அவர் இதயத்தில் இரத் தம் கசியாதா என்ன?" என்ருள் நர்ஸ்.

நான் அசிரத்தையோடு தலை யசைத்துவிட்டு "முன்கோபி அவர்..." என்றேன்.

"முன்கோபம் என்பது மூதே விக்குப் பிறந்த முதற் குழந்தை. அது மனித இதயத்தில் இடம் கொண்டால் மானுஷீகமே மண் ணுகிவிடும்" என்ருள் நர்ஸ்.

"நடந்தது நடந்துவிட்டது; இறந்த கால சிந்தனைக்கு இடம் கொடுத்தால் இருட்டறையிலே இடறி விழுவதற்கு ஒப்பாகும்; ஏதோ அவன் திருடிவிட்டான், இவர் முன்கோபியாக நடந்து கொண்டார்; நான் கார் அடி பட்டு கிடக்கிறேன்..."

"எது எப்படியானுலும் ஒரு தாய்; ஒரு தந்தைதான் அவனு டைய வேதனைக் குரலைப் புரிந்து கொள்ளமுடியும்."—

முகத்தை ஓர் வெட்டு வெட்டி இப்படி பதில் மொழி தந்தாள் நர்ஸ். நர்ஸாக பணி புரிகிறவர் களுக்கு இயற்கையாகவே தாயன்பு சுரக்குமோ?

"அவனுக்கு இத்தனை அனுதா பப் படுகிறீர்களே! உங்களுக்கு அறிமுகமானவனு?" என்று சங் கேதமாகக் கேட்டு வைத்தேன்.

"ஆம்;...எங்கள் ஊருக்குப் பக்கத்து ஊர்காரர்" என்ருள்.

இதைக் கூறியதும் நர்ஸ் அவ சரமாகப் போய்விட்டாள். அவள் வருகையை எதிர்நோக்கிக் காத் திருந்தேன். அதன் பின் அவள் வரவேயில்லை.

அவளை வைத்து அடுக்கு மாளி கைகள் ஆயிரமாகக் கட்டிவிட் டேன். என் வருங்கால வாழ்வும் வனப்பும் அவளைக் கொண்டே துலங்க வேண்டும்.

எங்கிருந்துதான் இந்தக் காய்ந்து தேய்ந்த காதல் என் உள்ளத்தில் குடிகொண்டதோ!... நான் வெட்கித் தலை குனிந்தேன்.

சில தினங்களில் நான் குண மடைந்து ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறினேன்.

ராமனுதபுரத்தில் தஸ்தகீரின் வீட்டில் அவர் கடிதம் எழுதியபடி இறங்கினேன். தஸ்தகீருக்கு, அவர் மனைவியார் என்னை வரவேற்ற முறை நூதனப் பாணியாக இருந் தது. வயோதிகத்தின் வாயிற்படி யிலே அடியெடுத்து வைக்கும் அந்த அம்மாளுக்கு இன்னும் வெட்கம் நீங்கவில்லை. கோணிக் கோணியவாறு தூண்மறைவிலே நின்றுகொண்டார்.

"அப்துல், ஷரீப், எங்கு இருக் கிருர்கள்?"—என்று அவர்களது இரு புதல்வர்களைப்பற்றி விசாரித் தேன்.

"இருவரும் பட்டணத்தில்தான் வசிக்கிறார்கள். மூத்தவன் லீவில் வருவதாக எழுதி இருந்தான். இளையவன் ஒரு வேலையுமில்லா மல் சுற்றி..."—என்று நிறுத்தினுர் அவர் மனைவி.

தஸ்தகீர் என்னைப் பார்த்துச் சொன்னுர்: "ஷரீப் கல்யாணத் தின் போதுதான் உன் கட்டுரை தொடங்க வேண்டும்...சுபமாக ஆரம்பித்து சுகமாக முடியும்."

நான் சிரித்துக்கொண்டேன்.

ஒரு வாரம் நகர்ந்தது. கல்யா ணத்துக்கான ஏற்பாடுகளை வெகு துரிதமாக கவனிக்கலானுர் தஸ்த கீர். அவரும் நானும் வீட்டு வராந்தாவில் உரையாடிக்கொண் டிருந்தோம். வாசலில் கார் வந்து நின்றது. பீடு நடையிலே வீடு அதிர இறங்கிவந்தார் ஓர் ஆபீ ஸர். தஸ்தகீரும் நானும் அதிர்ச்சி யடைந்தோம்.

மூக்குக் கண்ணுடியை இழுத்து மூக்கு நுனியில் வைத்து, கண்களை

அகலவிரித்து கூர்மையாகப் பார்த்தார். சந்தேகமில்லை அவரேதான். பழைய கஸ்டம்ஸ் ஆபீஸர் சர்வ சாதாரணமாக வீட்டுக்குள் நுழைந்தபோது எங்களுக்குத் துணுக்குற்றது. ஆபீஸர் எங்களை வெறித்து நோக்கும் தினுசு திவ்யமாக யில்லையே!

தஸ்தகிருக்கு அங்க அவயவங்கள் ஆட்டம் காணத் தொடங்கின. கஸ்டம்ஸ் ஆபீஸர்களிடம் மரியாதைக் குறைவாக—சட்டத்தை மீறி சர்ச்சை பண்ணியதால் வந்த வினை! சர்க்கார் உத்தியோகஸ்தர்களிடம் சாத்வீகமாய் நடந்து கொள்ள வேண்டிய திருக்க, அசட்டுத்தனமான கேள்வியும் வம்பும் எதற்கு?

“ஸார்...ஹீ! வந்து...இங்கு இப்படி உட்காருங்க...”—

ஈஸிச்சேரை விட்டெழுந்து அவையடக்கமாய் சுட்டி விரலைக் காண்பித்தார் தஸ்தகீர். ஆபீஸர் உட்கார்ந்ததும் அவரையும் உட்காரும்படி கையமர்த்தினார்.

“நீங்கள் யாரோ?...எங்கோ பார்த்த மாதிரி.” என்று இழுத்தார் ஆபீஸர்.

“ஆம் நான்தான் கஸ்டம்ஸ் ஆபீஸிலே தவறுதலாக வார்த்தையாடி வேதனையைச் சம்பாதிச்சுட்டேன்; மன்னிக்கணும். போலீஸ் கிலீஸ்லே இழுத்து மதிப்புக் கெடும்படி போதிக்கப்படாது. ஏதோ தவறாக அப்படி...ஸார் உத்தியோக விஷயமாக வந்தீங்களாக்கும்?...”—என்று உளறிக் கொட்டினார் தஸ்தகீர்.

ஆபீஸர் கடகடவென நகைத்து விட்டு நான் உங்களைக் கேட்கிறேன், நீங்கள் என்னைக் கேட்கிறீர்கள். நல்ல கூத்து!”—என்றார். இச்சமயத்தில் தஸ்தகீர் மனைவி யார் வந்து விட்டார்.

“அம்மா!”—என்றார் ஆபீஸர்.

“எப்போ வந்தேடா அப்துல்! உன் அத்தாதாண்டா இது, இவுஹ முன்னால் மரியாதையில்லாமல் கால்மேல் கால் போட்டு இருக்கிறீயே!”—

தாயாரின் வாய் மொழி அதிர்ச்சியைக் கொடுத்தது ஆபீஸருக்கு.

“அம்...அம்...அம்மா இவுஹ அத்...அத்தாவா?...”

“உம். ரங்கூனிலிருந்து வந்து ஏழெட்டு நாளாச்சு.”

இப்பொழுது தஸ்தகீர் உட்கார்ந்து கொண்டார்; ஆபீஸர் மரியாதையாக நின்றுகொண்டார்

பட்டணத்தில் தம்பி ஷரீபின் செய்தியை விளக்கினார் ஆபீஸர் அப்துல்.

“அங்கே ஒருத்தர் சாமானைத் திருடியதாகக் குற்றம் சாட்டப்பட்டான் ஷரீப். அவனைப் பிடித்து அடித்து மிதித்துச் சிறைக்கு அனுப்பிவிட்டார் யாரோ ஒரு மகானுபாவர். நம் நர்ஸ் மேரியும் நானும் அவனை மீட்டு வந்தோம். மேரியின் கவனிப்பில் சிகிச்சை பெற்று வருகிறான்... நர்ஸ் மேரியும் அவனும் கலப்பு மணம் செய்துகொள்ள முடிவு செய்திருக்கிறார்கள்...அத்தா வந்ததோட....

“என் வயிறு எரியிதேடா! எவன் என் பிள்ளையை நொறுக்கி தலையிலே மண்ணைக் கொட்டிக் கிட்டானோ பாவி...”—

தாயாரின் ஒப்பாரி கூக்குரலோடு ஊரையே கூட்டி வந்தது. தஸ்தகீர் மௌனமானார்.

★ ★ ★

மறுநாள் நானும் அவரும் ஓர் அவசரத்தை முன்னிட்டு ரங்கூனுக்குப் பிரயாணமானோம். அந்த அவசரந்தான் என்ன? தமிழகத் தரிசனக் காண்டத்திலே, தனயன் சித்ரவதைப் படலம் அம்பலமாகக் கூடாது என்பதே!






## 11. இறைவனுக்கு நன்றி செலுத்துதல்

பொறுமையின் பெருமையைப் பற்றிச் சென்ற இதழில் படித்தோம். துன்பத்தின்போது பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டியதைப்போன்றே இன்ப வாழ்விலும் பொறுமையைக் கைக் கொள்ள வேண்டும் என்றும் தெரிந்து கொண்டோம். சுக வாழ்வில் பொறுமையுடனிருப்பதற்கு அடையாளம் இறைவனளித்த அருட்கொடைகளை நல்வழியிற் செலவழிப்பதும், எல்லை மீறாமல் நம்மைத் தடுத்துக் கொள்வது மாகுமென்றும் படித்தோம். இவ்வாறு இறையருளை இறைவழியில் பயன்படுத்துவதே இறைவனுக்கு நன்றி செலுத்துவதாகும் என்பதை இவ்விதழில் விளக்குவோம்.

பொறுமையைப் போன்றே, இறைவனுக்கு நன்றி செலுத்துதலும் இறை வழியில் முக்கியமான தொரு செயலாகும். இன்ப வாழ்வில் பொறுமையைக் கொள்பவர்கள் சிலரேயாவர். இதைப் போன்றே நன்றி செலுத்துவோரும் சிலரே என்று இறைவன் கூறுகின்றான், “நீங்கள் என்னை நினையுங்கள்; நானும் உங்களை நினைக்கின்றேன்’ எனக்கு நன்றி செலுத்துங்கள்; நன்றி மறவாதீர்கள்” என்றும் இறைவன் கூறுகின்றான். “இறைவனைத் துதி செய்யும் நாவையும், நன்றி செலுத்தும் மனத்தையும், நம்பிக்கைக் கொண்ட மனைவியையும் தேடிக்கொள்ளுங்கள்” என்று நாயகமவர்கள் கூறியுள்ளார்கள்.

அறிவுக்கேற்ப எண்ணம் எழும்; எண்ணத்துக்கேற்ப செயல் தோன்றும். எல்லா அருட்கொடைகளையும் இறைவனே அளிக்கின்றான் என்ற அறிவே இறைவனுக்கு நன்றி செலுத்தும் எண்ணத்தைத் தருகிறது. இந்த எண்ணத்தைப் பொறுத்தே இறைவனுக்கு நன்றி செலுத்த முடியும். எனவே இவ் அறிவு தெளிவாய் இருக்கவேண்டும்.

படைப்புக் களனைத்தையும் போஷித்து வளர்ப்பவன் இறைவன். இவ்வேலைகளில் அவனுக்கு இணையுமில்லை; துணையுமில்லை. இறைவனுக்கு இணையாக எதை எடுத்துக்கொண்டாலும், நமக்கு அருள் புரிவதில் இறைவனுக்குத் துணையாக எவ

ரை எண்ணினும் பூரணமாக நன்றி செலுத்த முடியாது. உணவுப் பொருள்கள் விளைவது மழையால் என்றும், மழை பொழிவது மேகத்தால் என்றும் எண்ணினும், மேகத்தை எழுப்புவதும், அதைப் பல இடங்களுக்கும் கொண்டு செல்ல காற்றை ஓடச் செய்வதும் சூரிய உஷ்ணம் என்றும், சூரியனைப் படைத்து இயக்குபவன் இறைவன் என்றும் அறிந்தால்தான் இறைவனுக்கு மட்டும் நன்றி செலுத்துவோம்.

இவ்வாறின்றி, மழையைத் துதித்தலும், சூரியனை வணங்குவதும் அறிவின்மையாகும். நமக்குக் கடிதம் எழுதியவனுக்கு நன்றி செலுத்தாமல் கடிதம் எழுதிய எழுதுகோலுக்கு நன்றி செலுத்துவதைப் போன்றது இச் செயல். எனவே எல்லாக் காயங்களுக்கும் மூலகர்த்தாவாகிய இறைவனுக்கே நன்றி செலுத்தவேண்டும். "ஆதம் (அலை) அவர்களைப் படைத்து, வேண்டிய அருட்கொடைகளைக் கொடுத்த பின், அவர் எவ்விதம் நன்றி செலுத்தினார்?" என்று மூசா (அலை) அவர்கள் இறைவனிடம் கேட்டார்கள். அதற்கு "அருட்களெல்லாம் என்னாலேயே கிடைத்தன என்று ஆதம் அறிந்தார். அதுவே எனக்கு நன்றி செலுத்தியதாயிற்று" என்று இறைவன் கூறினான்.

இறைவனுக்கு நன்றி செலுத்துவதற்காக நாம் அவனைப் போற்றுகிறோம், வணங்குகிறோம். உள்ளத்தில் நன்றி செலுத்தலின் அடையாளம் உலகோரின் நன்மையை நாடுவதும், பிறர் பெற்றிருக்கும் நல்லருளைக் கண்டு பேராசையும் பொறாமையும் கொள்ளாதிருத்தலுமாகும். நாவால் நன்றி செலுத்துவது இறைவனைப் புகழ்வதாகும். 'அல்ஹம்துலில்லா' (புகழனைத்தும் இறைவனுக்கே) என்பது நன்றியைத் தெரிவிப்பதில் உயர்ந்த முறையாகும்.

**கஸ்ஸாலியவர்களின் "கீமியா யெ ஸஆதத்" ஒரு மாபெரும் அறிவுக் கடல். அதன் ஆழத்தில் மூழ்கி, விலை மதிப்பற்ற பல நன் முத்துக்களை எடுத்து நமக்கு வாரி வழங்குகின்றார் நண்பர் அப்துர் ரஹீம். அந்த நன் முத்துக்கள் நம் வாழ்வுக்கு அழகு சேர்க்கும் அணிகலனாய் விளங்குமாக!**

இறைவனுக்கு நன்றி செலுத்துவதில் முக்கியமான பகுதி இறையருளை இறைவழியிலேயே செலவிடுதலாகும். ஏனெனில் ஒருவரிடமிருந்து பெற்ற பொருளை அவருக்கெதிராகப் பயன்படுத்தினால், அவருக்கு நன்றி செலுத்தியதாகாது. எனவே இறையருள் ஒவ்வொன்றும் எதற்காக அருளப்பட்டது என்பதை ஆராய்ந்து அதற்கான வழியில் செலவிடவேண்டும். இத்தகைய நேர்வழித் திட்டங்களை விளக்குவது ஷரீஅத் சட்டங்களாகும்.

இறைவன் நம்மைப் படைத்து, வேண்டிய உறுப்புகளையும், மற்றும் பொருட்களையும் அளித்திருப்பதெல்லாம், அவைகளை நல் வழியில் பயன்படுத்தி நாம் இறைவனை அடைவதற்காகும். எனவே அவைகளை நல்வழியிற் பயன்படுத்தா திருப்பது நன்றி மறந்த செய்கையாகும். அவைகளைத் தீய வழியில் பயன்படுத்துவது மேலும் நன்றி மறந்த குற்றமாகும். இவ்வுண்மையை ஓர் உதாரணத்தால் விளக்குவோம்:

ஓர் அரசன் தூர தேசத்திலுள்ள தன் அடிமைக்குக் குதிரை ஒன்றை அனுப்பி, அதைக் கொண்டு அவ் அடிமை தன்னிடம் வந்து சேரும்படி விரும்புகிறான். அரசனுக்கு நன்றி செய்ய நாடினால் அக் குதிரை மீதேறி அடிமை அரசனிடம் போய்ச்சேருவான். குதிரையைப் பயன்படுத்தாது இருந்து விட்டாலும், குதிரைமீதேறி அரசனை விட்டு மேலும் வெகு தூரம் பிரயாணம் செய்தாலும் அரசனுக்கு நன்றி கொன்றவனாவான்.

இவ்வாறு அருட்கொடைகளைத் தீய வழியில் செலவழித்து இறைவனை விட்டு வெகுதூரம் செல்வது நன்றி மறந்த செயலாகும். அவைகளைப் பயன்படுத்தாது இருந்து விட்டாலும் அருட்கொடைகளை அவமதித்து, நன்றி மறந்த தவறு ஏற்படும். ஒரு அருளை மதிக்கவில்லையானால் பல அருட்கொடைகளின் மதிப்பை மறந்து விடுகிறோம். கண்களைப் பெற்றதால் இறைவனது சிருஷ்டியின் அற்புதங்களைக் கண்டு வியந்து இறைவனைப் போற்றுகின்றோம். இவ்வாறு செய்யவில்லையென்றால் கண்களைப் பெற்றதன் பயனை இழப்பதுடன், கண்ணால் காண்பதற்கு வேண்டிய ஒளியைத் தரும் சூரியனையும் மதிக்காது இருந்துவிடுகிறோம். எனவேதான் "நன்மை புரிவோரை நானிலமும் வானங்களும் போற்றுகின்றன. பாவம் செய்தவனை வானமும் பூமியும் சபிப்பதாக" நாயகமவர்கள் கூறியுள்ளார்கள்.

மேற்கூறிய உதாரணத்தில், குதிரை மீதேறி அடிமை அரசனிடம் வந்தாலும் வராவிட்டாலும் அரசனுக்கொன்றும் குறைந்துவிடாது. அரசனின் அன்புக்கட்டளையை ஏற்காமல், அரசனின் அன்பை அடிமை இழந்துவிடுகிறான். செய் நன்றி கொன்று அடிமையே நஷ்டமடைகிறான். இதைப் போன்றே நாம் இறைவனுக்கு நன்றி செலுத்துவது நம் நன்மைக்கே என்றும், நன்றி செலுத்தாவிட்டால் இறைவனுக்கு நஷ்டமில்லை என்றும் திருமறை கூறுகிறது.

இறைவனுக்கு நன்றி செலுத்தும்போது நாம் இறையருளுக்காக நன்றி செலுத்தக் கூடாது. இறைவனுக்காகவே நன்றி செலுத்தவேண்டும். ஏனெனில் இறைவனை அடைவதே நம் குறிக்கோள். இறைவனை அடையும் சாதனங்களை அருளியதற்காக இறைவனையே நேசிக்கவேண்டும். இறைவனளித்த

பொருளைமட்டும் விரும்பினல் உண்மையில் இறைவனை நாடியவர்களாசமாட்டோம். மேற்கண்ட உவமையில், குதிரையைக் கொடுத்து அன்புகாட்டிய அரசனையே அடிமை விரும்ப வேண்டும். குதிரை கிடைத்ததில் மட்டும் களிப்பு கொண்டால் அக் குதிரையை அரசனைத் தவிர வேறு யார் கொடுத்திருப்பினும் அதே சந்தோஷத்தையே அடைவான். இது உண்மையிலேயே அரசனுக்கு நன்றி செலுத்தியதாகாது.

எனவே, இறைவனையடையும் சாதனங்களை அருளிய இறைவனுக்கே நன்றி செலுத்தவேண்டும். ஐம்புல இச்சைகளைத் திருப்திபடுத்தும் சாதனங்களை அருளியதற்காக இறைவனுக்கு நன்றி செலுத்துபவர்கள் பூரணமாக இறைவனுக்கே நன்றி செலுத்தியவராக மாட்டார்கள். ஏனெனில் இத்தகைய அருட்கொடைகள் இவ்வுலக இன்பத்துக்கேயன்றி, மறுமைக்குப் பயன்படா. மறுமைக்குப் பயன்படுபவைகளையே நல்லருளாகக் கொள்ளவேண்டும். இறை வழியிலிருந்து நம்மைத் திருப்பும் பொருள்களைப் பேரருளாகக் கொள்ளக்கூடாது. அவை நம்மை விட்டு நீங்கினல் சந்தோஷப்பட வேண்டும். நம் செல்வங்கள் கள்வனல் கவரப்படுவதைவிட நம் ஈமான் ஷைத்தானல் திருடப்படுவதே நமக்குப் பெரு நஷ்டத்தையளிக்கும்.

இறைவனுக்கு நன்றி செலுத்த மறப்பதின் காரணம் அறியாமையாகும். இறைவனின் அருட்கடல் அளப்பரியது. ஆராய்ந்து பார்ப்பதின் மூலமே அதில் ஓரளவை அறிய முடியும். எனவே சிருஷ்டிப் பொருள்களின் பயனை அறிந்து கொள்ள முயலவேண்டும்.

தேவைப்பட்ட பொருள் கிடைத்தால் இறைவனுக்கு நன்றி செலுத்துவோரில் பலர், கேட்காமலே கொடுக்கப்பட்ட அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துவதில்லை. ஏனெனில் இவைகளின் பயனை இவர்கள் அறிவதில்லை. நம்முடைய ஒவ்வொரு மூச்சும் ஓர் அருளாகும். ஏனெனில் நம் ஆயுளைக்கொண்டே மறுமைக்கு வேண்டியவைகளைச் சேகரிக்க வேண்டியிருக்கிறது.

சூரியன், காற்று போன்ற எல்லோருக்கும் பொதுவாய்க் கிடைக்கும் அருட்களை நாம் மதிப்பதில்லை. ஏனெனில் அவைகள் இல்லாவிடில் என்ன நேரிடுமென்பதை நாம் அனுபவித்ததில்லை. நம்மிடமுள்ள ஒரு நல்லருள் நம்மைவிட்டுப் போகும்வரையில் அதன் பயனை உணராமல் நாம் நன்றி செலுத்தத் தவறி விடுகின்றோம். கண் பார்வை போகுமுன் அதை நல்வழியில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். உடல் நலம் இருக்கும்போதே நற்செயல்களையும், வணக்கங்களையும் நிறைவேற்றிக்கொள்ள வேண்டும். எனவே சிந்தித்து ஆராய்ந்து இறையருட்களின் அவசியத்தைத் தெரிந்து கொண்டு நன்றி செலுத்த வேண்டும்.

தன்னிடமுள்ளவைகளை விடப் பிறரிடமுள்ள அருட்களைப் பெரிதாக நினைத்து. இறைவன் தனக்கருளியவைகளை மதிக்காததாலும் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை. இத்தகையோர் தம்மை விடத் தாழ்ந்தோரின் நிலையுடன் ஒப்பிட்டு, தம்மை நல்ல நிலையில் வைத்திருக்கும் இறைவனுக்கு நன்றி செலுத்த வேண்டும்.

துன்பத்தின்போது காட்ட வேண்டிய பொறுமையை இன்பத்தின்போதும் கைக்கொள்ளவேண்டியதைப் போன்றே, இன்பத்தின் போது இறைவனுக்கு நன்றி செலுத்துவதைப் போன்று துன்பத்தின்போதும் நன்றி மறக்கக் கூடாது. ஒரு துன்பம் இவ்வுலகில் மட்டும் நமக்கு நஷ்டமளிப்பின், அதற்காக இறைவனுக்கு நன்றி செலுத்த வேண்டும். ஏனெனில் மறுமைத் துன்பம் அதைவிடப் பெரிதாகும். நம் கரங்களே சம்பாதித்த பாவங்களுக்காக மறுமையில் துன்புறுத்தப்படாமல் இவ்வுலகிலேயே அனுபவித்துவிட்டதற்காக இறைவனைப் போற்ற வேண்டும். ஏனெனில் எல்லாத் துன்பங்களும் பாவங்களுக்குப் பரிகாரமாகும்.

நாம் அடைந்த துன்பம் நமக்கு உரியதை விடக் குறைவாயிருப்பதாக நினைத்து நன்றி செலுத்த வேண்டும். ஆயிரம் அடிகள் பெற வேண்டியவன் நூறு அடிகளுடன் தப்பித்துக்கொண்டதைப் போன்று மகிழ்ச்சியடைய வேண்டும். ஒரு பெரியவரின் தலையில் சிலர் சாம்பலைக் கொட்டினர். அதற்கு அவர் நன்றி செலுத்தினர். "ஏன் நன்றி செலுத்தினீர்" எனக் கேட்கப்பட்டதற்கு, "என் மீது நெருப்பைக் கொட்ட வேண்டியவர்கள் சாம்பலைக் கொட்டியதற்காக!" என விடை பகர்ந்தார்.

இறைவன் விதித்திருந்த ஒரு தண்டனை முடிந்துவிட்டதற்காக துன்பத்தின்போது நன்றி செலுத்த வேண்டும். ஷெய்கு அபூசயீது (ரஹ்) அவர்கள் கீழே விழுந்து விட்டபோது 'அல்ஹம்துலில்லா' என்று நன்றி செலுத்தினர்கள். ஏன் என்று கேட்டதற்கு 'நான் விழ வேண்டும் என்ற என் தலைவிதி என்னை விட்டும் நீங்கிவிட்டதற்காக'' என்று கூறினர்கள்.

எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் இவ்வுலகின் மீதுள்ள ஆசையாகும். இவ்வுலகின் மீதுள்ள வெறுப்பு நம்மை மறுமையில் இன்பமடையச் செய்கிறது. நம் துன்பங்கள் இவ்வுலகின்மீது நமக்கு வெறுப்பைத் தருகின்றன. இவ்வெறுப்பு மறுமை இன்பத்துக்கு ஏதுவாகின்றது. இதற்காகவும் துன்பத்தின்போது நன்றி செலுத்த வேண்டும்.

மேற்கூறியபடி, துன்பத்தின் போது நன்றி செலுத்துவது நமக்குத் துன்பத்தைத் தாங்கும் சக்தியைத் தருகிறது. இவ்வாறு நாம் பொறுமையைக் கைகொள்ளுகிறோம். எனவே பொறுமையும் இறைவனுக்கு நன்றி செலுத்தலும் தொடர்புடையவை. இன்பத்தின் போது காட்டும் பொறுமையும், துன்பத்தின் போது காட்டும் நன்றியறிதலும் ஒன்றேயாகும். எனவே பொறுமையைப் போன்றே இறைவனுக்கு நன்றி செலுத்தலும் ஈமானில் பாதியாக இருக்கின்றது.—ஏ. அப்துர் ரஹீம்.



# கடமையும் காதலும்

★

மூலம்: ஹென்றி.

தமிழாக்கம்: இ. மு அப்துர் ரஸாக்

★

**கோ**ரப் புயல் தன் வெறியாட்டத்தை நிறுத்தி வெகு நேரமாயிற்று. ஆஸ்பின்வால் கடற்கரையிலிருந்த ஒளி மாடம் (லைட் ஹவுஸ்) வெறிச்சோடிக் கிடந்தது. விளக்கேற்றி வைக்கும் மனிதனைக் காணவேயில்லை. ஒளி மாடம் அமைக்கப்பட்டிருந்த கற்பாறைக்கு வந்திருக்கும் அவனைப் புயலரக்கன் கடலுக்குள் பிடித்துத் தள்ளியிருக்கலாம் என்று ஊகித்தார் மேலதிகாரி. ஆகவே அந்த வேலைக்கு மற்றொரு ஆள் தேவைப்பட்டது.

'மஸ்கிடோ வளைகுடா' வின் மணற்திட்டுகள், அறுபட்ட கரையுடைப்புகளைக் கடந்து வரும் கலங்களுக்குக் கரை காட்டும் அந்த விளக்கு மாடத்தைச் சரியானபடி நிருவகிப்பது எளிதான வேலையல்ல. பகலிலேயே கப்பல்கள் தத்தளிக்கும்! பனி படர்ந்த இரவுகளில் கலங்கரை விளக்கு இல்லாது முடியுமா?

ஒளி மாடத்தில் வேலை செய்வது சிறையிலிருப்பதைவிடக் கடினமானது. ஞாயிறு தவிர மற்ற நாட்களில் அதை விட்டு வெளியே செல்ல முடியாது. ஆஸ்பின்வால் துறைமுகத்திலிருந்து உணவு கொண்டு வரும் படகோட்டியைத் தவிர வேறு மனிதர்களையே பார்க்க முடியாது. பகலிலே வாயுமானியின் ஏற்ற இறக்கத்திற்குத் தக்க பலநிறக் கொடிகளை அடையாளம் காண்பிப்பது... இரவு வருவதற்கு முன் விளக்கேற்றுவது...இத்தோடு ஒரு நாளைக்கு குறைந்தது ஐந்தாறு முறை பாறையிலிருந்து மாடத்தின் உச்சிக்குச் செல்லும் நாநூறு சுழற் படிகளை ஏறி இறங்க வேண்டும். எவ்வளவு கடினமான வேலை?

இப்படிப்பட்ட வேலைக்குத் தகுதியும் திறமையும் கொண்ட ஆள் கிடைக்க வேண்டுமே என்று கலங்கியிருந்த அதிகாரிக்கு அன்றே வேறொரு ஆள் கிடைத்து விட்டால் வியப்பாயிருக்காதா? ஆம், புதிதாக வந்திருக்கும் அவன் வயதில் கிழவன். எழுபது கோடைகளை அனுபவித்திருக்கிறான். ஆயினும் உடற்கட்டு போர் வீரனைப் போலிருந்து. காலம், அவனது தலையில் நல்ல வெள்ளை வண்ணக் கோலத்தினைப் பூசி விட்டிருந்தது; அவன் கொடுத்த 'அறிமுகச் சீட்டினை' உற்று நோக்கிய அதிகாரி கேலிப் புன்னகையை இதழோரத்தில் நெளியவிட்டு அவனது தகுதியைச் சோதிக்கத் தொடங்கினார்.

"ஸ்காவின்ஸ்கி! (அதுதான் அவன் பெயர்) போலந்திலிருந்து வந்திருக்கும் நீ பட்டாளத்தில் மிகக் கெட்டிபோலிருக்கே?" —இது அதிகாரி.

"ஒளிமாடங்காப்பதிலும் கெட்டிக்காரனாயிருப்பேன் ஐயா"

"வயது முதிர்ந்த உன் கால்கள் படி ஏறியிறங்க அவ்வளவு பலமுள்ளவைகளா?"

"இந்தக் கால்களால்தான் பாலைவனங்களைக் கூடக் கடந்திருக்கிறேன்"

"கடல் வாழ்க்கை அனுபவித்ததுண்டா?"

"கப்பலில் மூன்றாண்டுகள் வேலை செய்திருக்கிறேன்"

"பார்க்காத வேலையே கிடையாது போலும்!"

"ஏனெனில் எதிலும் எனக்கு அமைதி கிடைக்கவில்லை"

'ஏன்?' — இதற்கு அவன் தோள்களை உயர்த்தியவாறே கூறினான்: 'என் விதி' என்று. 'ஆனால் கிழவனான நீ இந்த வேலையைச் சரிவர நடத்த முடியாது'—இறுதியில் இப்படிக் கூறினார் அதிகாரி.

தான் நின்றிருந்த பூமியே ஆடி விட்டது போலிருந்தது அவனுக்கு "ஐயா..." என்று அவன் கூறியது நெஞ்சு வெடித்து வெளி வந்ததோ என்னவோ?..." என் வாழ்விலே எத்தனையோ இன்னல்களுக்கு ஆளானேன். ஆயினும் நான் அமைதியாக வாழ முடியவில்லை. அமைதியைத் தேடி என் உள்ளம் அலையத் தொடங்கி விட்டது. நானோ கிழவன். எனக்கு இனிமேல் வேண்டியது அமைதி ஒன்றுதான். எனக்கு இந்த வேலை கிட்டிவிடுமென்றிருந்த என்மனமகிழ்ச்சியை வெட்டியெறிந்துவிடாதீர்கள் ஐயா! உங்களிடம்தான் இருக்கிறது இக்கிழவனின்சாந்தியும் சங்கடமும். ஐயா, என்னை உதறித்தள்ளி விடாதீர்கள். அமைதியின் அடிச்சுவட்டையே கண்டறியாத வெறியனாக என்னை ஆக்கிவிடாதீர்கள். கடவுள் தான் நீங்கள்! ஓட்டை விழுந்துபோன ஒரு கப்பலிலிருந்து சாவுக்கு மன்றாடிக் கொண்டிருக்கும் ஒரு










மனிதனைக் கரை சேர்த்த புண்ணியம் உங்களுக்குக் கிடைக்கும். மூழ்கிக் கொண்டிருக்கும் அந்தக் கப்பலுடன் என்னையும் மூழ்கச் செய்து விடாதீர்கள். நான் கடமை மறவாதவன்; கண்ணியமானவன் ...கட்டுப் பாடுள்ளவனுங்கூட... ஐயா!"

இரக்கத்திற்குரிய இச் சொற்கள் அதிகாரியின் உள்ளத்தைத் தொட்டதில் வியப் பொன்றும் இருக்க முடியாது. "நீ தான் இனி இந்த ஒளிமாடம் காப்பவன்". கிழவனின் சுருக்கம் விழுந்த முகத்தில் மகிழ்ச்சி ரேகைகள் படர்ந்தன. உவகையால் அவன் கண்கள் இரண்டும் ஒளிமயமாயின. இன்பக் கண்ணீர் இழைந்தோட உணர்ச்சியால் பிணைக்கப்பட்ட 'அன்பு நன்றி' என்ற சொற்கள் அவன் உள்ளத்திலிருந்தும் உரக்க வெளிவந்தன.

"இன்றே மாடத்துக்குப் போகிறாயா?"

"இதோ போகப்போகிறேன்"

"கடமையிலிருந்து ஒரு மயிரிழை தவறினும் நீ வேலையிலிருந்து நீக்கப்படுவாய்"—அதிகாரியின் கட்டளை இது.

அன்று மாலையே கதிரவன் ஓய்வெடுத்துக் கொள்ள மலையிடுக்கில் நுழையும் சமயம் அவன் தன் வேலைகளைக் கவனிக்கத் தொடங்கி விட்டான். ஆம், அதோ! அவன் ஏற்றிய விளக்கினின்றும் கிளம்பும் ஒளிக் கிரணங்கள் கொந்தளித்து ஓய்ந்த நீர்க் கண்ணாடியிலே அழகு பார்த்துக் கொண்டிருக்கின்றன. அமைதி தவழும் அந்த இரவில், கடலிலே தம் உடல் அழகு பார்க்கும் அவ்வொளிக் கிரணங்களுக்குப் போட்டியாக வானக் கடலிலே நீந்தி வந்த வட்ட நிலாவைச் சுற்றிப் பனி படர்ந்த வண்ணக் கோடுகள் கோட்டை கட்டியிருந்தன.

கீழிருந்து பார்ப்பதற்கு ஒரு சிறு பறவை போன்றிருந்த ஸ்காவின்ஸ்கி விளக்கின் பக்கவாட்டிலிருந்த திண்டின் மேலிருந்து கொண்டு தெறித்தோடும் எண்ணத் துளிகளை ஒன்று சேர்க்க முயன்று கொண்டிருந்தான். அவன் மனம் மீட்டப்பட்ட தந்தி போல முன்னும் பின்னும் அலைந்து கொண்டிருந்தது. வேடனால் துரத்தப்பட்டுப் புதரிலே தப்பியொளியும் விலங்கின் இதயம்போல மருண்டு கொண்டிருந்த அவன் இதயமும் அடித்துக் கொண்டது. கடும்புயலின் மத்தியிலே, கம்ப மொடிந்து கயிறுகள் அறுந்து, பிடிப்புக்கிருந்த துடுப்பையும் குமுறிவந்த அலைகட்குப் பலியிட்டு பெய்யும் பெருமழையினூடே இருள் கவிந்த ஒரு இரவில் கரை சேர்ந்த ஒரு படகோட்டியினுடைய நிலை போன்றிருந்து அவனதும்... ஏன்? கடந்தகாலத் துன்ப ஈட்டிகள் அமைதி நாடிய அவனுடைய இதய அடுப்பிலே காய்ச்சப்பட்டு அவனைச் சித்திரவதைக் குள்ளாக்கிக் கொண்டிருந்தன. நீரில், தெரியும் நிலவின் பிம்பம்போல் அவனது எண்ணக் கடலிலே கடந்த கால நிகழ்ச்சிகளின் பிரதிபிம்பங்கள் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருந்தன.

உலகின் பல பாகங்களிலும் தன்னைப் பழக்கியிருக்கிறான். அவை ஒவ்வொன்றும் அவனிடம் வீரத் தழும்புகளை விட்டுச் சென்றிருக்கின்றன. உழைப்புக்குக் கூலி தான்—ஆனால் அப்பணம் அவனை விட்டு நழுவிக் கொண்டேயிருந்தது.

ஆஸ்திரேலியாவின் தங்கச் சுரங்கத்தில் அவன் வேலை செய்திருக்கிறான். கிழக்கிந்தியக் காடுகளில் அரசாங்க வேட்டைக்காரனாயிருந்திருக்கிறான். எவினாவில் ஒரு கொல்லனாகக்கூட இருந்திருக்கிறான். ஆனால் அந்த ஊரையே அழித்த தீ அவனுடைய கடையை மாத்திரம் சும்மா விட்டிருக்கவா செய்யும்? ஹவானாவில் சுருட்டுக் கடை முதலாளியாக விருந்த அவன் சீதபேதியால் வருந்தி நின்றபோது, பங்காளி இலாபத்தைச் சுருட்டிக்கொண்டு போனதை அவன் எப்படி மறக்க முடியும்? இறுதியில் இந்த வேலைக்கு வந்து சேர்ந்திருக்கிறான். இங்கு அவனது கெட்ட காலத்திற்கு ஒரு நல்ல முடிவு ஏற்படத்தான் வேண்டும். ஏனெனில் இங்கு அவனைக் கெடுக்க நெருப்போ, மனிதரோ கிடையாது!

ஹங்கேரிப் போர் முனையிலே பங்கு கொண்டபோது துப்பாக்கி முனையால் ஏராளமான தழும்புகள் அவன் தசைகளிலே உண்டாக்கப்பட்டன. காரணம் 'தஞ்சம்' என்ற ஒரு சொல்லைச் சொல்ல மறுத்த வீர நெஞ்சம் அவனுடையது! 'இடர்' என்னும் பாசி படர்ந்தாலும் அவன் தன் இதயத்தைத் தூய்மையான செந்நீருடையதாகவே பார்த்துக் கொண்டான். துயருக்கு உயர் வளிக்கும் கோழையல்ல அவன். எறும்பைப் போல உயரே ஏறினான். நூறு தடவை கீழே விழுந்தாலும், மறுமுறையும் முயன்றிருக்கிறான்.

தன் இளம் வயதில் தன் ஊரில் தான் அனுபவித்த இன்பம் 'இன்றில்லாவிட்டால் நாளை வரும்' என்று எதிர்பார்த்தான். பருவங்கள் மாறினவே அன்றி அவன் கண்ட பலன்?—ஆம், அவன் தலை நரை தட்டி விட்டதுதான்! ஆனால் இப்போதோ முதுமையான அவன் சிந்தனைப் பறவையின் சிறகுகள் ஒடிக்கப்பட்டு விட்டன. அவனுக்கு வேண்டியதெல்லாம் அமைதி! அமைதி! அதை நாடியே அவனுடைய ஒவ்வொரு அணுவும் தவம் செய்து கொண்டிருந்தது. 'ஒரு சந்தடியற்ற மூலை. அங்கே சாந்தம் வழியும் முகத்தினள் ஒருத்தி மீட்டும் இசை 'அமைதி-அமைதி' என எழுந்து இன்ப மூட்டுகிறது?—இவ்வாறு தான் அடிக்கடி கனவு கண்டான்.

ஆனால் அது கனவாகவே இருந்து விட்டால்......?

இந்த வேலை எத்தனையோ பேருக்குச் சலிப்பைக் கொடுத்திருக்கிறது. இளம் வாலிபர் பலர் இவ்வேலையில் சேர்ந்த மறுநாளே அதனின்றும் விலகி, நகரில் பிற மனிதரோடு, ஏதோ ஒரு பெரும் ஆபத்தினின்றும் தப்பித்து விட்டதாக எண்ணி விம்மும் நெஞ்சுடன் உலா வந்திருக்கின்றனர். ஏனெனில் இங்கு வேலை செய்யும் ஒருவன் பார்ப்பதெல்லாம் உணர்வதெல்லாம் கண்ணுக்கு அப்பாற்பட்டதாகவே உள்ளது. பரந்து விரிந்த வானம், அடி வானத்தோடு மோன நிலையில் குலவும் நீள் கடல், கானம் பாடும் காற்று.. ...வாழ்வின் முதல் நாள்தான் அவனது வாழ்வு முழுதும்—ஒரே ஒலிப்பதிவு—ஒரே இசைத் தட்டு! பின்பு சலிப்புக்குக் கேட்பானேன்? ஆயினும் பருவமாற்றமே அந்த இசைத் தட்டில் கிழிக்கப் படும் கோடுகளாகின்றன.

என்றாலும் ஸ்காவின்ஸ்கி, எங்கு மில்லாத மகிழ்ச்சி இங்கு தன்னை அரவணைப்பதைக் கண்டான். அமைதியின் படித்தளமான உவகைத் தொட்டிலிலே இயற்கையன்னை இன்னிசை இசைக்கத் தான் குறுநகையுடன் தூங்குவதாக உணர்ந்தான். வான வில்லின் வண்ணக் கலவைபோல என எண்ணத்திற்கு அப்பாற்பட்டதாக அவன் நினைத்து வந்த அமைதி தன்னை ஆட்கொள்ள வருவதாக அவன் உள்ளம் படம் திட்டியது.

காலதேவன் ஒன்றுக்குப் பின் விட்ட மணிச் சரங்கள் தொட்டு விளையாடிக் கொண்டிருந்தன. விளக்கு மாடத்தைக் கண்காணிக்கும் வேலையில் தன்னை நன்கு ஆழ்த்திவிட்டிருந்தான் ஸ்காவின்ஸ்கி.... ஓய்ந்திருக்கும்போது கூட்டங் கூட்டமாக மாடத்து உச்சியில் வந்து இளைப்பாறும் கடற் பறவைகளைக் காண அவன் உள்

..த்திருந்து கொள்ள ஆசை வெளிக்கிளம்பும். மகிழ்ச்சியால் மீதமிருக்கும் உணவை அள்ளி அள்ளி வீசுவான் இன்னும். அலையிறக்கத்தின்போது 'வான வில் தன் வண்ணக் கைகளால் கோலமிட்டதோ'என அழகு சிந்தும் சிப்பிகள், சங்குகள். நிர்மல மான இரவிலே வெண்ணிலவின் பிம்பத்தை தங்கத் தட்டென எண்ணி அதனைச் சுற்றிக் கும்மாள மடிக்கும் வெண்மீன்கள்—இவை ஒவ்வொன்றும் அவனை அமைதி யின்பால் அழைத்துச் செல்லும் கருவிகளாயின.

ஞாயிற்றுக் கிழமைகளில் நீல வண்ண மேலங்கியிலே ஆங்காங்கே அடுக்கி வைக்கப்பட்ட விண்மீன்களென விளங்கும் வெள்ளிப் பொத்தான்களைப் போட்டுக்கொண்டே மாதா கோவிலிலிருந்து வெளிவரும் போது "இதோ, கடமையுணர்ந்த நம் ஒளிமாடங் காப்பவன்" என்ற குரல்களைக் கேட்கும் போதெல்லாம் அவன் உள்ளக் கடலில் மகிழ்ச்சி அலைகள் ஆரவாரம் செய்யும். அன்று, மாடத்திற்கு வரும்போது ஸ்பானிய மொழியில் நாளிதழொன்றை வாங்கிவர மறக்கமாட்டான். ஐயோ! அறியாத மனம்! இதயத்தின் பாதி இன்னமும் பழைய எண்ணச் சுழல்களால் கிரங்கிக் கொண்டிருக்கிறது. சில வேளைகளில் உண்டி கொண்டுவரும் 'ஜோன்'சுடன் அரசியல் வானில் பறக்கவும் செய்வான்.

∴ ∴ ∴

ஆனால் இப்போதெல்லாம் அவன் வெளியில் வருவதே யில்லை. ஜோன்சுடன் பேசுவது கூட நின்றுவிட்டது. இந்த ஒரு வாரமாக யாருமே அவனைப் பார்க்காது கழிந்து விட்டது. ஆயினும் அவன் உயிரோடிருக்கிறான் என்பதற்கு இரண்டே இரண்டு அடையாளங்கள் — கொண்டு வரும் உணவு மறைவது' அதை விட கதிரவன் மறையுமுன் அங்கே ஒளி வீசும் விளக்கு. விளக்கின் அடியில் விழும் நிழலைப் போல, ஒளிமாடம் முழுதும் இருள் கவ்விக் கிடந்தது. அவன், பதறியழும் குழந்தையைப் போல ஏதோ ஒன்றை வெறிச்சென்று பார்த்துக்கொண்டிருந்தான். அவனிடம் உணர்ச்சியிருப்பதாகத் தோன்றவில்லை. இருள் கப்பிக் கிடக்கும் அவன் உள்ளத்தில் விளக்கேற்றுவது யார்? எப்போது?

அந்தக் காலம் விரைவிலேயே வந்து விட்டது. அவனது வாழ்வில் அது ஒரு நன்னாள். அன்று உணவோடு ஏதோ ஒரு பொட்டலமும் இருப்பதைக் கண்டான். அதன் வெளிப்புறத்தில் அவனுடைய பெயர் அச்சடிக்கப்பட்டிருந்தது. வியப்பு மேலிட அதனைக் கிழித்தான்...உள்ளே தன் சொந்த 'போலந்து' மொழியில் எழுதப்பட்டிருந்த கவிதை நூல்கள்—அவன் உள்ளத்திலே 'இதை யார் அனுப்பி யிருக்க முடியும்' என்ற கேள்விக்குறி. ஆம். சென்ற ஆண்டு அமெரிக்காவிலுள்ள ஒரு சங்கத்திற்கு அவன் எதற்கோ சிறிது தொகை அனுப்பி யிருந்தது நினைவுக்கு வந்தது. அவர்கள் தான் அனுப்பி யிருக்க முடியும்.

அவனது தாய்மொழியில் எழுதப்பட்டிருந்த அந்த நூல்கள் அவன் தான் கடந்து வந்த வாழ்க்கைப் பாதையைத் திரும்பிப் பார்க்கச் செய்தன. அவற்றிலொன்றை எடுக்க கை நீட்டினான். நீட்டிய கை ஏன் அப்படி நடுங்க வேண்டும்? அச்சமயத்தில் அவன் இதயக் கதவுகள் வேறு. ஒருமுறை பலமாக மூடித் திறந்தன. நடுங்கும் கை ஒரு புத்தகத்தை எடுத்துப் புரட்டியது. போலந்து நாட்டின் பெருங்கவியாகிய 'ஆதம்...' தீட்டிய கவிதைக் கொத்து அது. சண்டை செய்த சமயத்தில் துப்பாக்கியை விட கேவலம் ஒரு புத்தகத்திற்கு



மதிப்புக் கொடுக்கவா செய்யும் ஒரு போர் வீரனுடைய மனம்?

நடுங்கும் கைகளுடன் புத்தகத்தைப் புரட்டினான். ஏதோ ஒரு அதிசயம் நடக்கப்போவதுபோல் அச்சமயத்தில் துறைமுகக் கடிகாரம் ஐந்து மணி அடித்தது. மேகச் சேலையை உதறித் தள்ளி வானம் நிர்வாணமாகக் காட்சி தந்தது. அங்கொன்றும் இங்கொன்றுமாக சில பறவைகள் பறந்து கொண்டிருந்தன. மென்காற்றின் இசையில் தன்னை மறந்து தூங்கிக் கொண்டிருந்தது கடல். இயற்கையின் இந்த அமைதிக் கோலத்தை புத்தகத்தைப் படிக்கத் தொடங்கிய கிழவனின் சப்தம் கலைத்தது.

"லிதுவேனியா! என் இன்ப
நாடே, நீதான் என் சுகவீடே.
எந்நாவால் உனைப்புகழ? என்
அன்பே! எழிலே!
தன் நாடுதனை விட்டே தனி
வந்த மனிதன் தான்.
உன் அழகைப் பாடுகிறேன்..."

திடீரென அவன் தொண்டை கரகரத்தது. இருந்தும் சமாளித்துக் கொண்டு மீண்டும் உரக்கப்படித்தான்.

... ... ... அம்மா!
இறந்த என் கண்கள் திறந்தே
விட்டன!
சிறந்த உன் அன்புக்கரம்
மறந்தேனில்லை!
நிரந்தர உன் மடிமீது திறம்பட
மீண்டுவாழ
விரைந்தே எனை அழைக்கும்
விந்தைதான் செய்பாயோ...?"—

ஓடிய அவன் சிந்தனைக்கு ஆடி வந்த அலை முற்றுப்புள்ளி வைத்தது. பாடிய அவன் வாய் மண்ணிலே புதைந்தது. தங்கத் தட்டிலே பால் சிந்தியது போல அந்த மணற்திட்டிலே வெண்மையான அவன் மயிர்கள் பரந்து கிடந்தன.

நாற்பது ஆண்டுகள் தன் சொந்த நாட்டையே காணாது தன் தாய் மொழியை என்று தன் காதுகள் கேட்குமோ என அவன் பட்ட மனக்குறை ஆண்டவனுக்குத் தான் தெரியும். அந்த அன்பு மொழி, அழகு மொழி, அவன் மொழி இதோ, கடல் கடந்து வந்திருக்கிறது அவனைக் காண! தேங்கிக் கிடந்த அந்த ஆசை வெள்ளம், கரை உடைத்த குளமென அவன் கண்கள் வழியாகப் பாய்ந்து கொண்டிருந்தது.

மாலைக் கதிரவனை மலைவாய் விழுங்கிக்கொண்டிருந்தது. செம்மேகம், கருத்த மலைக்குப் பின்னே விரிக்கப்பட்ட திரைச்சீலையாகக் காட்சி தந்தது. கடற்பறவைகள் ஒளிமாடத்தைச் சுற்றிச் சுற்றிப் பறந்து கொண்டிருந்தன. ஸ்கா வின்ஸ்கி, அவைகட்கு உணவு தரும் வேளையல்லவா அது? தலையை உயர்த்திய அவன் முகத்திலே என்றுமில்லாத அமைதி கூத்தாடியது. தன் மனங்கொண்ட மட்டும் உணவை அள்ளி அள்ளி இறைத்தான். பால் மழையோவென ஐயுறும் வண்ணம் அவை அவன் தலையைச் சுற்றிலும் பறந்து கொண்டிருந்தன.

கதிரவன் இரவென்னும் திரையை மூடித் தூங்கத் தொடங்கி விட்டான். ஆனால் அந்த அப்பாவியோ, இருண்டு கொண்டிருந்த உலகிலே இருந்து கொண்டு செவ்வானத்தின் ஒளிக்கீரல்களினூடே தன் தாய் நாட்டை, தன் ஊரைக் கண்டு கொண்டிருந்தான். இளமையில் அவன் ஓடி விளையாடிய இன்பப் பூங்கா, வரிசை வரிசையான இல்லங்கள், செல்வங் கொழிக்கும் வயல் வெளிகள், அவைகளிலுள்ள பயிர்கள் ஆடும் நடனத்திற்கேற்ப பாட்டிசைக்கும் குளத்துத் தவளைகள், இறுதியாக அன்று இரவு அவன் பருவமங்கையரோடு ஆடிய நடனச்சாலை இவை ஒவ்வொன்றாக அவன்

மன்த்திரையின்கண் ஓடி மறைந்து கொண்டிருந்தன.

அந்த இரவுதான் அவன் தன் ஊரில் கழிக்கும் கடைசி இரவு என்று அவன் கனவுகூடக் காணவில்லை...காலை மலர்ந்து விட்டது. பகலவன் தன் வெண்கரங்களால் இருண்டு கிடந்த நகரத்தை வெள்ளிமுலாம் பூசிக்கொண்டிருந்தான். சேவல்கள் ஒன்றுக்குப் பின் ஒன்றாகப் பள்ளியெழுச்சிப் பாடல்கள் பாடிக்கொண்டிருந்தன. அத்தோடு ஊரெல்லாம் ஒரே பரபரப்பு, 'போர்' 'போரெ'ன்ற கூக்குரல்கள். முந்திய நாளே கொதித்துப் போயிருந்த அவன் இரத்தம் அவனையும் பிற இளைஞருடன் கொடியுடன் போருக்கு ஓடத் துரத்தியது. அவன் இதயத் துடிப்போ அவனுக்குள்ளேயே போர் முரசு கொட்டிக்கொண்டிருந்தது. நன்கு விடிந்துவிட்டது. கொடி பிடித்த கையோடு தன் குடி காக்க ஓடினான் அவன். வரிசையான இல்லங்கள், இயந்திரச் சாலை, பூஞ்சோலை, இதோ, தொலைவிலுள்ள 'பைன்' மரக்காடு... ஓடிக்கொண்டேயிருந்தவன் சிறிது நின்றான். தன் ஊரைச் சிறிது திரும்பிப்பார்த்தான். ஒளிமயமாக நின்ற ஒய்யாரக் கூடங்கள், கோபுரங்கள்...அந்த அழகுக் காட்சி இதோ, அவனை விட்டு மறைந்து கொண்டேயிருக்கிறது. ஓடினான்.. ...ஓடிக்கொண்டே இருந்தான், போருக்கு. அக்காட்சியை இனி எப்போது திரும்பவும் பார்க்கப் போகிறானோ?...

∴ ∴ ∴

திடீரென அங்கே ஒரு குரல் இடிமுழக்கமென எழுந்தது...படியிறங்கி வந்துகொண்டிருந்த உருவம் 'கிழமே, எழுந்திரு!' என அவனை உலுப்பிற்று. வெடிச்சப்தமென எண்ணிக்கொண்டே கிழவன் தன்னைத் தயார் படுத்திக் கொள்வதாக நினைத்துக்கொண்டு கண் திறந்து பார்த்தான். முன்னே ஜோன்சு நின்று கொண்டிருந்தான். கனவுமுறிந்து கிழவன் பேந்தப்பேந்த விழித்தான்.

''என்ன இதெல்லாம்? உனக்கு உடம்புக்கு ஏதாவது...?''

'ஒன்றுமில்லை'— 'பின் ஏன் விளக்கேற்றவில்லை...? செரோமாவிலிருந்து வந்த கப்பல் பாறையில் முட்டி மூழ்கிவிட்டதாம். உன்னை வேலையைவிட்டு நீக்கப் போகிறார்கள்...என்னோடு படகில் ஏறு...''

ஸ்காவின்ஸிக்கு இப்போது தான் புரிந்தது. அவன் அன்று மாலை விளக்கே ஏற்றவில்லை!

∴ ∴ ∴

சில நாட்களுக்குப்பின் ஆஸ்பின்வாலிலிருந்து நியூயார்க்குக்குச் சென்று கொண்டிருந்த ஒரு கப்பலின் மேற்தட்டில் நின்று கொண்டிருந்தான் அவன். இப்போது அவனுக்கு ஒளிமாடத்தில் வேலை கிடையாது. உலகம் அவனை மீண்டும் சோதிக்கத் தொடங்கி விட்டது. அமைதி நாடிய அவன் கடலை நோக்கினான். ஒரே இரைச்சல்—ஆரவாரம். கடலுக்கேது அமைதி? அவன் வாழ்க்கைக் கடலிலும் அப்படித் தானோ?. மோன நிலையில் கூடிக் குலவிய அடிவானத்தைப் பார்த்தான். தன் வாழ்நாள் முடிவுதான் அது. அங்குதான் அமைதி இருக்கிறது! அதற்குள் தன் நாட்டை எண்ணினான்...அவன் படித்த நூலின் சாரம்—அவன் வாழ்வுப் பாதை—அவனை விட்டு ஓடிவிடுவதுபோல நெஞ்சை அடிக்கடி பிடித்துவிட்டுக் கொண்டான். அமைதியை நோக்கி கப்பல் நகர்ந்து கொண்டிருந்தது.



# தேன்

★

எம். கே. ஜமரீன்

''மானம், குலம், கல்வி, வன்மை, அறிவுடைமை, தானம், தவம், முயற்சி, தாளாண்மை, தேனின் கசிவந்த சொல்லியர் மேல் காமுறுதல் பத்தும் பசிவந்திடப் பறந்து போம்'' என்பது அனுபவசாலிகள் கண்ட உண்மை. தேன் போன்ற இனிமையான சொற்களையுடைய பெண்களின் மீது........பசியின் கொடுமையை விளக்கும் இப் பொன் மொழியில் தேனின் இனிமை மட்டுமின்றி, பெண்ணின் பெருமையும் புலனாகும்! இனிமையில் தேனுக்கு இணை தேனேதான். இனிமையில் மட்டுமா? மனிதர்களின் உடல் நலத்துக்கும் அது ஒரு ஒப்பற்ற உணவாக விளங்குகிறது.

வேத காலந் தொட்டு நமது நாட்டில் மருத்துவ முறையிலும், பத்திய முறையிலும் தேன் ஒரு தனியிடம் பெற்று வந்துள்ளது. இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் கிரேக்க விளையாட்டு வீரர்கள், ஒலிம்பிக் போட்டியில் கலந்து கொள்ளுவதற்கு முன், தேன் உண்டே பயிற்சி நடத்துவதுண்டாம். உடலுக்குச் சிறந்த சக்தியை அளிக்கும் உணவுப் பொருள்களில் தேன் இன்று தலைசிறந்ததாகக் கருதப் படுகிறது.

தேனில் நிறைந்த அளவில் கார்போ-ஹைட்ரேட் என்னும் மாவுப் பொருள் அடங்கியுள்ளது. ஒரு பவுண்டு தேனில், கார்போ-ஹைட்ரேட் 81·2 சதவீதம், தண்ணீர் 18·2 சதவீதம், ப்ரோட்டீன் 0·4 சதவீதம், ஆஷ் 0·2 சதவீதம் பொதிந்துள்ளன. மேலும் ஏ. ஸி. வைட்டமின்களும், ஏழு வகை 'பி' வைட்டமின்களும், இரும்புச் சத்து, மாங்கனீஸ், பொட்டாசியம், குளோரின், சோடியம், சுண்ணாம்பு முதலியனவும், வேறு சில எண்ணெய்ப் பொருள்களும் தேனில் இருக்கின்றன. உடலமைப்பிற்கு இன்றியமையாத பொருளாகிய தாது உப்புக்கள் இதில் அடங்கியுள்ளன. ஒரு பவுண்டு தேனில் 1475 கலோரி வெப்பம் வெளியிடப்படுகிறது.

1. தேனின் எரிப்புச் சக்தி, மீன், முட்டை, புலால், காய்கறி இவற்றினுடைய சக்தியைவிட அதிகம். ஒரு பெரிய கோழி முட்டை கொடுக்கும் கலோரிப் பலனை ஒரு மேசைக் கரண்டி அளவு தேன் கொடுக்கிறது.

2. தீப்புண், இருமல், காய்ச்சல், நீரிழிவு போன்றவற்றைக் குணப்படுத்துவதிலும், கிரணங்கள், நுரையீரல், சிறுநீர்ப்பை, தோல் இவற்றின் நோய்கள், இதயவலியின்மை, புற்றுநோய், பாரிச வாயுவினால் ஏற்படும் தொல்லை, தூக்கமின்மை, செரியாத் தன்மை, குடற் பைகளின்

கிரயங்கள் முதலியவற்றை ஆற்றுவதற்கும் தேன் பயன் படுகிறது.

3. இரத்தத்தைச் சுத்தம் செய்யும் தன்மை குறிப்பாக தேனில் அதிகம் உண்டு. இரத்தத்திலுள்ள செவ்வணுக்களின் ஆற்றலைக் கணிசமான அளவு அதிகரிக்கச்செய்கிறது. சீழ்ப்பிடித்த காயங்களை ஆற்றுவதற்கும் இது பயன்படுகிறது. வயிற்றுப் புண்ணைக் குணப்படுத்துவதற்கு இதை உபயோகிப்பதன் மூலம் நல்ல பலன்கள் ஏற்பட்டுள்ளன. வயிற்றுப் புண்ணுக்குக் காரணமாயுள்ள உபரி அமிலத்தைத் தேன் குறைக்கிறது. எகிப்திய நாகரிகம் உச்ச நிலையில் நின்று தரணியின் கண் தனிக்கொடி நாட்டிய காலத்திலேயே தேனின் நலந் தரும் தன்மைகளைக் கண்டு விட்டதாக ஆங்குள்ள சித்திர லிபிகள் சித்தரிக்கின்றன.

4. எகிப்திய மன்னன் ஃபேரௌன் தாங்கமோன் உடைய பிரமிட் கோபுரத்தை 1923-ம் ஆண்டில் புதை பொருள் ஆய்வாளர்கள் ஆராய்ந்து பார்த்த போது, தேன் வைக்கப்பட்டிருந்த ஓர் பாத்திரத்தை அவர்கள் அங்கே கண்டனர்! மூவாயிரத்துக்கு மேற்பட்ட ஆண்டுகள் உருண்டோடியும் அப்பாத்திரத்திலுள்ள தேன் கெடாமல் இருந்து வந்துள்ளது! எனவே ஆண்டுகள் கணக்கின்றி கழிந்தாலும் அழுகிக் கெட்டுப் போகாதிருக்கக்கூடிய உணவுப் பொருள் தேன் ஒன்று தான் என்பது நமக்குத் தெள்ளிதிற் புலனாகிறது. மேலும் இதன்மூலம், எண்ணற்ற நுண்ணுயிர்களையும், பலதிறப்பட்ட பூஞ்சைக் காளான்களையும் கொல்லும் தீவிர சக்தியுடைய கிருமி நாசினித் தன்மை தேனுக்கு உண்டென்பதும் உய்த்துணரக் கிடக்கின்றது.

5. அன்றாடம் தேன் சாப்பிடுவதைப் பொன்னான விதியாக ஒவ்வொருவரும் கடைப்பிடித்தல் நலம். "அது உடலைப் பருமனாக்காது. அதை விடாமல் உட்கொண்டு வந்தால் உன் உடல் நலத்தையும், பலத்தையும் கண்டு நீயே மலைத்துவிடுவாய்" என்று ஒரு டாக்டர் கூறியுள்ளார். ஒரு நாளைக்கு இரண்டு அவுன்ஸ் தேனை வெதுவெதுப்பான நீரில் அல்லது பாலில் கலந்து சாப்பிடுதல் மிக்க நலம் பயக்கக்கூடியது. அபெர்டீன் பல்கலைக் கழகத்தில் தேனீ வளர்க்கும் கலையின் விரிவுரையாளராகவிருக்கும் ஒருவர், "தேனீ வளருங்கள். நீண்ட நாள் உயிர் வாழ விரும்பினால் தேன் சாப்பிடுங்கள்" என்கிறார்.

பண்டைக் காலத்தில் பிரசித்தி பெற்ற மருத்துவரும், 'வைத்திய சாஸ்திரத்தின் தந்தை' எனப் புகழப் பெற்றவருமான ஹிப்போ கிரேட்ஸ் 107 வயதுவரை வாழ்ந்திருந்தார். இவர் தினந்தோறும் தேனை உண்டும், பல வியாதிகளுக்கு மருந்தாகக் கையாண்டும் வந்தாராம்.

ரஷ்ய நாட்டுப் பேரறிஞர் 'உதிந்த் சேவி'ன் தலைமையிலுள்ள ஓர் மருத்துவ நிலையத்தில் ஈளை (காசம்) நோயால் அல்லலுற்ற சில நோயாளிகளுக்கு ஒரு மாதம்வரை தினமும் நான்கு முதல் ஆறு அவுன்ஸ் வரை தேன் கொடுக்கப்பட்டதாம். அவர்களின் எடை அதிகரித்தது; இருமல் குறைந்தது; நோயாளிகள் தெம்புடன் காணப்பட்டனராம்.

6. ஒரு சிறு கோப்பையளவில் தெளிதேன் எடுத்து, இளங்கொதிப்பேற்றி, சிறிது எலுமிச்சம் பழச் சாற்றைவிட்டு உட்கொள்ளுவதன் மூலம் இருமலைப் போக்கலாம். வெண்ணையைத் தேனில் சேர்த்துக் கலந்து தீப்புண்களுக்குத் தடவினால் விரைவில் குணம் காணலாம். நீரிழிவின் துவக்க நிலையில், நோயாளிகளுக்குக் கொடுக்கக்கூடிய இனிப்புப் பொருள்களில் சர்க்கரைக்குப் பதிலாகத் தேனையே பயன்படுத்தி குணம் காணலாம். நரை, திரை, மூப்பு, இறப்பு இவற்றையெல்லாம் கூட ஒத்திப் போடும் தன்மை தேனுக்கு உண்டு.

7. ஒப்புயர்வற்ற இந்த சத்து மிகுந்த தேனை உற்பத்தி செய்யும் பொருட்டுத் தேனீக்கள் செய்யும் கடினமான உழைப்பு நம்மை வியப்படையச் செய்கின்றது. சாதாரணமாக ஒரு அவுன்சு தேனைச் சேகரிக்க ஒரு தேனீ பல்லாயிரம் மலர்களை நாடிச் செல்ல வேண்டியிருக்கிறது. கோடைக் காலத்தில் ஒரு தேன் கூடு சுமார் 375 ராத்தல் வரையிலும் தேனைக் கொண்டதாக இருக்குமாம்!

எண்ணிலடங்கா மூலிகைச்

செடிகள் உள்ளிட்ட மலர்கள் பலவற்றிலிருந்தும் தேனீக்கள் தேனைத் தயாரிக்கின்றன. இந்த சாரம் தயார் செய்யும் முறையை மனிதனால் தோற்றுவிக்கப்பட்ட எந்த ரசாயன சாலையும் பின்பற்ற முடியாதாம்! இங்கேதான், எல்லையிலாக் கருணையுடன் இவ்வுலகைப் படைத்தளிக்கும் வல்லோனான அல்லாஹ்வின் ஆற்றலை நாம் எண்ணி யெண்ணி இறும்பூது எய்த வேண்டியவர்களாயுள்ளோம்.

மக்களின் மனக்கறை போக்கி நிறையூட்டும் மறையினிலே நம இறையோன் இதைக் குறித்து, 'உமதிறைவன் தேனீக்கு மலைகளிலும், மரங்களிலும், கட்டிடங்களிலும் கூடுகளை அமைத்துக் கொள்ளும்படி அறிவூட்டினான்.'—(குர்ஆன் 16 : 68)

பின்னும், "நீ ஒவ்வொரு மலரிலிருந்தும் புசித்து இறைவன் உனக்கறிவித்த எளிதான வழியில் (உன் கூட்டுக்குள்) ஒடுங்கிச் செல்" (எனக் கட்டளையிட்டான்). இதனால் அதன் வயிற்றிலிருந்து பல நிறங்களையுடைய ஒரு பானம் (தேன்) வெளிவருகின்றது. அதனால் மனிதர்களுக்கு நலம் உண்டு. —(குர்ஆன் 16 : 69)"

என்பதாக, இன்று மருத்துவ மன்னர்களும், விஞ்ஞான விற்பன்னர்களும் அல்லும் பகலும் ஆய்ந்தாய்ந்து கண்டுள்ள—கண்டுபிடித்துக் கொண்டிருக்கும்—முடிவுகளை, பொருள் பொதிந்த ஓரிரு வசனங்களாக பல நூறு வருடங்களுக்கு முன்பே தெளிமையுறத் தீட்டி விட்டான்!



# கருத்துவக்கும் ...னியமுதே !


ஏ. எம். முஸ்தகீம்,

கொழும்பு.


★

[டிசம்பர் இதழில் "பொற் கொடியாள் நிலையென்ன ?" என்ற தலைப்புடன் மனைவி கணவனுக்கு எழுதிய கடிதத் துக்கு மறுமொழியாக இதோ கணவன் எழுதுகின்றுன் ;]

அறிவுரைகள் நிரம்பியஉன்
அன்பான மடல்கண்டு
உளந்திருந்தி நல்லறிவால்
உண்மைவழி காண்கின்றேன்.

★

எழிலுருவே உன் எண்ணம்
என்மனதில் எழுந்ததுதான்
வருடங்கள் கடந்ததனுல்
வருந்திமை இஃதன்றே ?

★

பொய்மையிலா நெஞ்சுடைய
பொற்கொடியாள் எனைக்
[கண்டாள்.
பற்றினளே உன்னிடத்தைப்
பழுதடைந்தேன் புல்லறிவால்.

★

சூழ்நிலையின் சூழ்ச்சியதால்
சுய அறிவை இழந்துவிட்டேன்.
ஊழ்வினையின் வலிமையதால்
உள்ளொளியைத் துறந்து
[விட்டேன்.

★

கலைகள்பல கற்றிருந்தும்
கருத்தழிந்து விட்டவன்நான்.
கண்ணிருந்தும் படுகுழியில்
கால்நழுவி விழுந்தவன்நான்

★

என்றெல்லாம் அறிந்திருந்தும்
எனக்காக வாழுகின்ருய்
என்றுணர்ந்து என்னரசி !
எல்லையிலா மகிழ்வடைந்தேன்.

★

பண்புயர்ந்த பூங்கொடியே !
பொறை நிறைந்த பொற்றெடியே!
உண்மையான கற்புடைத்த
உள்ளம்நிறைப் பைங்கொடியே !



★

...க்குமெழில் மாதுடனே
...மிழந்து உனைமறந்து
...ர்ந்தபழி தீர்வதற்கு
...ந்தவொரு வழிவகுத்தாய்

★

...பொற்கொடியாளுடன் வந்தால்
...ாறுமையுடன் ஏற்றிடுவேன்"
...மொழிந்த உன்மடலை
...திமையும் படித்திட்டாள்.

★

...ிப்புமிகப் பொங்கிடவே
...ணீரும் வடித்திட்டாள்.
...மனையில் இருவிளக்கும்
...ிபெருக்கும் எனஉரைத்தாள் !

★

...ணுக்கு ஆடை பெண்
...ண் ஆடை பெண்ணுக்கு"
...றநெறி இஸ்லாத்தில்
...ண்டுஎனக் கண்டவள்நீ.

★

...த்துவக்துப் கனியமுதே !
...மணி நீ வாழ்வதற்கு,



கடலோடிப் பொருளீட்டக்
கல்மேறிச் சென்றவன்நான்.

★

ஊர்பழிக்கும் ஆளானேன்
உனக்கிதனுல் துயர்வினைத்தேன்
துடியிடையா ளுடன்வந்தால்
தூற்றுவரோ ஊரவர்கள் ,

★

ஆரத்தி ஏந்திடினும்
ஆரமுதாய் அவள்வரினும்
அகிலத்தார் பழிக்கெல்லாம்
ஆளாவோம் ! என்செய்வோம் !

★

உயர்நோக்கு உடையயள்நீ !
உளப்பண்பு அடைந்தவள்நீ
உனக்கிடு நான்ஆகேன்
உயர் இஸ்லாம் உணர்ந்தவளே !

★

பெண்கல்வி பெற்றதனுல்
பெரும்பேறு அடைந்தவன்நான்
மண்மீது கல்வியின்றேல்
மாதரினம் மங்கிடுமே !



# து வாழ

## எஸ்கேஜி

வி.சி

**பி**ரபல பிரெஞ்சு காவலாசிரியர்களில் ஒருவரான விக்ட ஹ்யூகோ, தாம் எழுதிய, "லே மிஸரபிள்" என்ற நூலில் ச டத்தின் உருவமாக ஒரு பாத்திரத்தைச் சிருஷ்டித்திருக்கிற சட்டத்தின் உண்மையான பிரதிநிதி எப்படி இருக்கவேண்டு என்பதை அப் பாத்திரத்தின் மூலம் விளக்குகிறார். போலீ அதிகாரிகளைப் பார்த்தால் அச்சித்திரம் தான் என் மனத்தில் எழு சில தினங்களுக்கு முன் என் வீட்டிற்கு வந்த போலீஸ் அதிகா யைக் கண்டதும் என் எண்ணம் பலப்பட்டுவிட்டது.

அதே போலீஸ் அதிகாரி மலர்ந்த முகத்துடன் என்னை வ வேற்றார்! அதுவும் அவரது அலுவலகத்தில்! இது எனக்கு ஆ சரியத்தை அளித்தது. என்னைப் பரிகசிக்கிறாரோ என்று ஒரு கண நினைத்தேன். ஆனால் அவரது வார்த்தைகளில் சந்தோஷமே மிகு யாகத் தோன்றியதால் என் ஐயத்திற்கு ஆதாரமில்லை என் கருதினேன்.

"உங்களைப் பார்க்க வேண்டுமென்றுதான் புறப்பட்டுக் கொண் டிருந்தேன். நல்ல வேளை வந்துவிட்டீர்கள்" என்று கூறியப தமக்கு முன்பிருந்த ஆசனங்களைக் காட்டினார். நான் உட்கார்ந் கொண்டு சீனுவையும் உட்காரும்படி கூறினேன்.

"என்ன விசேஷம், இன்ஸ்பெக்டர் ஸார்?"

"விசேஷம் நிறைய இருக்கிறது" என்று சொல்ல ஆரம்பி தவர் என் பக்கத்திலிருந்த சீனுவைப் பார்த்தார். அவரது பார்வை யில் இருந்த தயக்கத்தைக் கண்ட சீனு, தான் புறப்படுவதாகச் சொ னான்.

சீனுவை உட்காரச் சொல்லிவிட்டு, "நீங்கள் சும்மா சொல்லு கள் இன்ஸ்பெக்டர் ஸார்! பையன் நம்முடையவன்தான். ந பிக்கையானவன்!" என்றேன்.

"வாஸந்தி இருக்குமிடம் சீக்கிரத்தில் தெரிந்துவிடும் என் நினைக்கிறேன். இப்போது அதற்கான துப்பு கிடைத்திருக்கிறது அவள் மறைவுக்கு மூலகாரணமான ஆள் கிடைத்துவிட்டான். அ னைக் கைது செய்து ரிமாண்டில் வைத்திருந்தோம். சற்று முன்புதா அவன் ஜாமீனில் விடுதலையாகிப் போயிருக்கிறான்!"

"சொல்கிறேன். அவன் உங்களுக்கெல்லாம் நன்றாகத் தெரிந் ன் தான்!"

"தெரிந்தவனா? அப்படி யார் ஸார் அவன்?"

"அவனைக் கைது செய்ததால் மற்றொரு விஷயம் கூட வெளி கி யிருக்கிறது" என்று கூறிய இன்ஸ்பெக்டர் நிதானித்து, "அது சரி. விஷயத்தை நீங்கள் எங்களிடம் மறைத்து விட்டீர்களே!" என்று ட்டார்.

"என்ன மறைத்துவிட்டேன்?"

"உங்களுக்கு ஒரு மொட்டைக் கடிதம் வந்ததா?"

சில காலமாக அது எனக்கு மறந்திருந்தது. இப்போது அதைப் றி இன்ஸ்பெக்டர் கேட்கிறார்.

"ஆமாம். ஆனால் அதுபற்றி நான் எவரிடமும் ஒன்றும் சொல்ல ல்லையே!" என்றேன்.

"அதுதான் தவறு. அவ்விஷயம் எங்களுக்கு முன்னமேயே ரிந்திருந்தால் இவ்வளவு கஷ்டமில்லை."

"நான் அதைப்பற்றி யாரிடமும் பிரஸ்தாபிக்கவில்லை ஸார்!"

"அப்படி இருக்கக்கூடாது மிஸ்டர் ஷரீப்! சட்டத்துக்கு மாறாக களுக்குப் பாதகம் ஏற்படுத்தும் ஒவ்வொரு விஷயமும் எங்கள் னத்துக்குக் கொண்டுவரப்படவேண்டும்" என்று கூறினார் இன்ஸ் க்டர். அவரது வார்த்தையில் இருந்த கண்டிப்பும் இப்போது நடந் க்கும் சம்பவங்களும் 'ஆம்' என்று ஒத்துப் பாடுவதுபோல எனக் த் தோன்றின.

"நீங்கள் சொல்வது உண்மைதான் ஸார்! அது இருக்கட்டும். ப்போது கைதானவன் யார்?" என்று மீண்டும் கேட்டேன்.

"உங்கள் ஸ்டுடியோவில் புரடொக்ஷன் மானேஜராக இருக்கி னே பாலு என்று ஒருவன், அவன்தான்!" என்றார் இன்ஸ்பெக்டர். னக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. பாலு ஒரு அப்பாவிப் பயன் என்பது எனக்குத் தெரியும். ஆனால் இவ்வளவு வேலைக் ரன் என்பது இப்போதுதான் புரிகிறது!

"உங்களுக்கு மொட்டைக் கடிதம் எழுதியவனும் அவன் தான்!"

என் ஆச்சரியம் முன்னிலும் அதிகமாகி விட்டது. "என்னால் நம் வே முடியவில்லை ஸார்!"

"செய்தவனே ஒப்புக்கொள்ளும்போது உங்கள் நம்பிக்கையைப் றி எங்களுக்கென்ன?"

"வாஸந்தியைத் தான் மறைத்து வைத்திருப்பதாக அவன் சான்னானா?"

இன்ஸ்பெக்டர் சிரித்து விட்டார்: "அப்படியானால் தான் எங்க க்குத் தொந்தரவு இல்லையே! ஆனால் உங்களுக்கு மொட்டைக் தம் எழுதி உங்களைப் பயமுறுத்தியதாக அவன் ஒப்புக்கொண்டிருக் றான்!"

"அவனுக்கு எவ்விதக் கெடுதலும் நான் நினைக்கவில்லையே!"

"என்ன காரணத்துக்காக அவ்விதம் செய்தானோ? இப்போது ருக்குத் தெரியும்?" என்றார் இன்ஸ்பெக்டர்.

உலகத்தில் எத்தனையோ விதமான மக்களை நாம் தினமும் பார் கிறோம். அவர்களில் நல்லவர்கள் என்று நாம் யாரை நினைக்கிறோமோ அவர்கள் கெட்ட தன்மைகளின் பிறப்பிடமாக நடந்து கொள்கிறா கள். அதேபோல தோற்றத்தில் முரடனாக இருப்பவன் மகா சாதுவா இருப்பதையும் காண்கிறோம். எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இரு குமோ, யார் கண்டது?

"அண்ணா, இதோ பாருங்கள் இவர்தான்!" என்று மெல் என்னிடம் ஒருவரைச் சுட்டிக்காட்டினான் சீனு. அந்த மனிதர் ஸ்டே னுக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தார். "இவர் தான் அண் ஹோட்டலில் வேறு இரண்டு பேர்களுடன் பேசிக்கொண்டிருந்தா மந்தவெளியிலுள்ள புதிய பங்களாவுக்குச் சொந்தக்காரரும் இவ தான்!"

வந்தவர் நேரே உட்பக்கம் சென்றுவிட்டு திரும்பி வந்தார். அவ அழைத்த இன்ஸ்பெக்டர் என்னிடம், "இவர்தான் புதிதாக இங் வந்திருக்கும் ஸி. ஐ. டி. இன்ஸ்பெக்டர் பிரபாகர்." என்று சொல் விட்டு என்னை அவருக்கு அறிமுகப்படுத்தினார்.

"உங்களைச் சந்தித்ததில் மிகவும் சந்தோஷம்!" என்று கூறின பிரபாகர்.

"ஸார் இருப்பது மந்தவெளிப் பக்கமா?" என்று இன்ஸ்பெக் ரிடம் நான் கேட்டேன்.

"அங்குதான் ஜாகை வைத்துக்கொண்டிருக்கிறார்!" என் இன்ஸ்பெக்டர்.

மெதுவாக சீனுவின் பக்கம் திரும்பினேன். ஏமாற்றத்தின் பிர பலிப்பு அவன் முகத்தில் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

## 12

அன்று பிற்பகல் வேலை ஒன்றுமில்லை. நேராக கம்பெனிக்கு போய் பூதலிங்கம் பிள்ளையைப் பார்த்து, போலீஸ்டேஷனில் கிடைத் தகவல்களைத் தெரிவித்து விட்டு வரலாமென்று நினைத்தேன். அ விஷயங்கள் அவருக்குத் தெரியாதிருக்கலாம் அல்லவா?

படாதிபதி பிள்ளை சிந்தனையுடன் உட்கார்ந்துகொண்டிருந்தா அவருக்கு இரண்டு விதக் கவலைகள். குழந்தைபோல் தாம் வளர்த் பெண்ணைக் காணோமே என்பது ஒன்று. ஆயிரக் கணக்கில் தாம் செ வழித்த பணம் வீணாகிவிடாமல் பொங்கலுக்குள் படம் வெளி வந் விட வேண்டுமே என்பது மற்றொன்று. வாஸந்திக்குப் பிரதம பாக கொடுக்காவிட்டால் கூட இரண்டாவது கவலை அவருக்கு இரா இப்போது படம் ஏறக்குறைய முக்கால் பாகம் உருவாகிய பின்ன இந்த நிலை ஏற்பட்டுவிட்டால் என்ன ஆகிறது?

என்னைக் கண்டதும் அவர், "உங்களுக்குத் தெரியுமா மிஸ் ஷரீப்! நம் பாலுவை போலீஸார் அரஸ்ட் செய்து இப்போது ஜாமினி விட்டிருக்கிறார்கள்!" என்றார்.



"தெரியும் ஸார். இன்று போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிருந்த பாது இன்ஸ்பெக்டர் சொன்னார். அதைத் தெரிவிக்கத்தான் இப் பாது வந்தேன்!"

"எனக்கும் எல்லா விபரங்களும் தெரியும். ஆனால் பாலு இவ் தம் நடந்து கொள்வான் என்று நான் நம்பவில்லை!"

"உலகப் போக்கு அவ்விதம் இருக்கிறது!"

"அரட்டைக் கல்லியாக இருப்பவன் வெறும் பேச்சுடன் நின்று டுகிறான். அமைதியாக இருப்பவன் காரியத்தைச் செய்கிறான்?"

"ஆமாம் ஸார். அமைதியாக நிற்கும் தண்ணீர் ஆழமாக இருக் ம்' என்று சொல்வார்கள் அல்லவா?"

"உங்களுக்கு வந்த மொட்டைக் கடிதம் பற்றி எங்களிடம் சொல்ல ல்லையே" என்று கேட்டார் படாதிபதி. "சொல்லியிருந்தால் உடனே வண்டிய காரியங்களைச் செய்திருக்கலாம் அல்லவா?"

"அதை லட்சியம் செய்யவில்லை ஸார்!",

"அதுதான் இவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டது!

"நாம் எண்ணுவதும் நடப்பதும் நன்மையைப் பற்றியதாக மட்டும் ருக்க வேண்டும். அவ்விதம் நியாயமாக நடந்துவந்தால் ஆண்டவன் மக்குக் குறைவைக்க மாட்டான்; எவ்விதமான கஷ்டம் வந்தாலும் ர்த்து விடுவான் என்பது என் கருத்து!"

"மிஸ்டர் ஷரீப், நீங்கள் சொல்வது சரிதான். நமது எண்ணத்துக் த் தக்கபடிதான் வாழ்வு அமையும் என்பது எனக்கும் தெரியும்!"

இச்சமயத்தில் யாரோ ஒரு கிழவர் வந்திருப்பதாகவும் படாதிபதி யைப் பார்க்க விரும்புவதாகவும் ஆபீஸ் பையன் வந்து கூறினான். 'சரி, ரச் சொல்!' என்று அவர் கூறிக்கொண்டிருக்கையிலேயே பரபரப் டன் கிழவர் ஈஸ்வர மூர்த்தியா பிள்ளை உள்ளே பிரவேசித்தார்.

"ஐயா, என்ன இது? நான் கேள்விப்பட்டது நிஜம்தானா? குழந் தையைக் காணோமாமே!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை பெரியவரே, ஏன் பதறுகிறீர்!" என் ர் படாதிபதி.

"உண்மையைச் சொல்லுங்கள் ஐயா! பேப்பரில் போட்டிருக்கிற ாமே! குழந்தை எங்கே போனாள்?"

"எங்கேயும் போய்விட மாட்டாள் பெரியவரே! நீர் ஏன் இப்போ ந்தீர்?"

"என்ன ஐயா சாவதானமாகச் சொல்கிறீர்கள்! அந்தோ! எப்ப ப்பட்ட சீமான் வயிற்றில் பிறந்த குழந்தை! அனாதையாகி ஆதரவில் மல் நின்றது! இப்போது அதற்கு என்ன ஆபத்து ஏற்பட்டிருக் றதோ......"

"பெரியவரே சும்மா போகமாட்டீர்? எங்கேயாவது போனால், ரகைத் திரும்பி வருவாள்! அவள் என்ன குழந்தையா?"

"குழந்தை தான் ஐயா. குழந்தை தான்! அவளுக்கு உலகம் ன்ன தெரியும்? பிறந்த காலத்திலிருந்தே அவளுக்கு இந்த மாதிரிக் ஷ்டம் தான் வரவேண்டுமா? கடவுளே, என் குழந்தைக்கு ஒன்றும் ற்பட்டு விடக் கூடாது!..."

அவரை மீண்டும் அடக்க வாயெடுத்தார் பூதலிங்கம் பிள்ளை. "அவர் மனக்கஷ்டம் அதிகமாகத்தான் இருக்கும். நீங்கள் பேசாமல் அவரை விட்டுவிடுங்கள். இவ்விதம் கொஞ்சம் புலம்பினுல் அம் மனக் கஷ்டம் குறையும்!" என்று அவரிடம் கூறினேன்.

இச்சமயத்தில் ஆபீஸ் பையன் ஓடிவந்து புரொடக்ஷன் மானேஜர் பாலு வந்திருப்பதாகச் சொன்னுன். அவனை அனுப்பி வைக்கும்படி கூறிவிட்டு, ஈஸ்வர மூர்த்தியா பிள்ளையின் பக்கம் திரும்பி, பெரியவரே! அந்த அறைக்குள் போய்ச் சற்று இருங்கள். அப்புறம் உங்களை அழைக் கிறேன்!" என்றுர் படாதிபதி.

ஒன்றுமே நடக்காதது போன்ற தோற்றத்துடன் பாலு உள்ளே வந்தான். அச்சமயத்தில் அவனைப் பார்ப்பவர்கள், 'இவ்வளவு நல்ல வனைத்தானு போலீஸார் குற்றவாளியாகக் கருதுகிறுர்கள்' என்று நினைப்பார்கள். அவனிடம் முதலில் படாதிபதியோ அல்லது வேறு யாருமோ, போலீஸ் காவலில் அவன் இருந்ததைப் பற்றி முதலில் ஒன்றும் கேட்கவில்லை. படப் பிடிப்பு சம்பந்தமாக பூதலிங்கம் பிள்ளை யிடம் பேசிவிட்டு அவன் புறப்பட்டான்.

"ஏனப்பா பாலு, ஒரு விஷயத்தைச் சொல்லாமலேயே புறப்பட்டு விட்டாயே!" என்று கேட்டார் படாதிபதி.

"என்ன விஷயம்?" என்று கேட்டவாறு திரும்பி வந்தான் பாலு.

படாதிபதி இலேசாக என்னைப்பார்த்து நகைத்த வண்ணம், "போலீஸ் காவலில் இருந்தாயாமே! வாஸ்தவமா?" என்றுர்.

பாலுவின் முகம் தொங்கிப் போயிற்று. எனினும் தன் மன நிலையை முகத்தில் காட்டாதபடி மறைக்க முயற்சித்தான்.

"ஆமாம் ஸார். அனுவசியமாகப் போலீஸார் என்னைச் சந்தே கித்துக் கைது செய்தார்கள்; பிறகு விடுதலை செய்து விட்டார்கள்."

"போலீஸாருக்கு என்ன பைத்தியமா அனுவசியமாக உனக்குத் தொந்திரவு கொடுக்க?"

"நானும் சரியான நடவடிக்கை எடுக்கப்போகிறேன், ஸார்!"

பூதலிங்கம் பிள்ளையின் முகத்தில் கடுகடுப்பு ஏற்பட்டது.

"பாலு, என்னை ஒன்றும் தெரியாத மடையன் என்று நினைத்துக் கொண்டாயா? நீ பூனையின் வேஷத்தில் இருக்கும் வஞ்சகப் புலி என் பது எனக்குத் தெரியும்! முட்டாள்! போலீஸார் மீது நடவடிக்கை எடுக்கப்போகிறுனும்!

பாலு தலை குனிந்தான். பயத்தினுல் அவன் உடல் ஆடியது.

"என்னுடைய ஸ்தாபனத்தில் எந்தவிதமான அக்கிரமமும் நடக் கக்கூடாது என்பதில் நான் கவலை எடுத்து வருகிறேன். அதைக் கெடுக்க புல்லுருவி மாதிரி வந்து சேர்ந்திருக்கிறுனே இந்தப் பாவி! பார்த்தால் பசு; பாய்ந்தால் புலி என்பது சரியாகப் போய்விட்டது!..."

அப்போது நான் இடைமறித்து, "ஏன் மிஸ்டர் பாலு, உங்களுக்கு நான் என்ன அநியாயம் செய்தேன்? என்றேன். தலை நிமிர்ந்து என்னை ஒரு தடவை பார்த்து விட்டு மீண்டும் குனிந்து கொண்டான். அவன் கண்களில் நீர் துளிர்த்திருந்தது.



"இந்த முட்டாள் பாம்பாகப் பிறந்திருக்க வேண்டியவன்; தவறிப் போய் மனிதனுகப் பிறந்துவிட்டான். பால் விட்டு வளர்த்தாலும், இப்பாதகனின் போக்கு மாறிவிடுமா?" என்றுர் படாதிபதி.

சிறிது நேரம் அமைதியாக இருந்தது. மீண்டும் படாதிபதி பூத லிங்கம் பிள்ளையே பேச்சை ஆரம்பித்தார்:

"இவன் படித்து விட்டு வேலை யில்லாமல் தெருத் தெருவாய் அலைந்த போது, நான் வேலை கொடுத்து ஆதரித்தேனே, அதற்காக இந்த விதமான துரோகத்தில் இறங்கி விட்டான் துரோகி! பட்டினியும் பசியுமாக கண்ணடைத்து வந்தவன் பணத்தில் புரளுகிறுனல்லவா, அப்படியிருக்கும் போது ஏன் இவ்விதமான கெட்ட எண்ணம் வராது! அழுக்கில் புரள்பவனுக்கு, அழகான மஞ்சம் கொடுத்தால் மட்டும் அவனது உளுத்த குணம் போய்விடுமா?"

"உலகத்தில் எல்லோரும் நல்லவர்களாக இருந்து விட முடியுமா?" என்று நான் மெதுவாகக் கூறினேன்.

"ஆமாம் உண்மைதான். இத்தனை வருஷங்களில் நல்லவனுகவோ அல்லது போக்கிரியாகவோ இருப்பவர்களை நான் பார்த்திருக்கிறேன். ஆனல் இவனைப் போன்ற அயோக்கியனைப் பார்த்ததேயில்லை" என்று கூறிவந்தவர், திடீரென்று, "டேய் இங்கே வா!" என்று பாலுவை அழைத்தார்.

அவன் அருகில் வந்ததும், "ஆமாம், எதற்காக நீ மொட்டைக் கடிதம் எழுதினுய்?" என்று கேட்டார்.

அவன் பேசாது நின்றுன். "சொல்லுகிறுயா இல்லையா?" என்று பலமுறை கேட்டபோது கூட அவன் பேசவில்லை.

"நமக்கு இனி ஒன்றுமில்லை ஸார். போலீசார் பார்த்துக் கொள் வார்கள். சட்டத்தின் முன் அவன் பேசிக்கொள்வான்" என்றேன் நான்.

"ஆமாம். நீங்கள் சொல்வதும் சரிதான்." என்று என்னிடம் படாதிபதி கூறிவிட்டு, "சரி நீ போய் உன் வேலையைக் கவனி" என்று அவனுக்கு உத்திரவிட்டார்.

அவ்விடத்தைவிட்டு பாலு சென்றதும் படாதிபதியிடம், "எனக்கு ஒரு சந்தேகம் ஸார்!" என்று நான் மெதுவாக ஆரம்பித்தேன்.

"என்ன சந்தேகம்?"

"ஒன்றுமில்லை. நம் படத்தில் கதாநாயகனுக நடிக்கிறுரே ராம் குமார்—அவர் ஒரு வேளை வாஸந்தியை ஆள் வைத்துச் தூக்கிச் சென் றிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன்" என்றேன்.

படாதிபதி சிரித்தபடியே, "என்ன மிஸ்டர் ஷரீப், புது விவகாரத் தைக் கிளப்புகிறீர்கள்!" என்றுர்.

"இல்லை ஸார்! அவருக்கு அந்தப் பெண்ணின் மீது நெடுநாட் களாக ஒரு கண் இருந்து வந்தது. அதனுல்தான் சொல்கிறேன்."

"அதெப்படி உங்களுக்குத் தெரியும்?"

"இதனுல் என் மீது கூட அவர் கோபத்தோடு இருந்தார்!"

படாதிபதி மீண்டும் சிரித்துவிட்டு, 'நல்ல வேடிக்கை! அந்தப் பெண்ணை அவர் விரும்புவதற்கும் உங்களைக் கோபிப்பதற்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்டார்.

''அவள் அவரை லட்சியம் செய்வதில்லை; ஆனால் என்னிடம் தாராளமாகப் பழகுகிறாள். இதனால்தான் கோபம்!'' என்று சுருக்கமாகச் சொன்னேன். 'ஹோட்டல் தி மவுண்ட்'டில் ராம்குமாரும் மற்றும் சிலரும் கூடி எனக்கு விரோதமாகச் சதி செய்தார்கள் என்றும் கூறினேன்.

ராம்குமாரை இது விஷயமாகக் கேட்டு வேண்டிய நடவடிக்கை எடுப்பதாக அவர் எனக்கு வாக்களித்தார்.

பின்னர் சிறிது நேரம் மேற்கொண்டு என்ன செய்வது என்பது பற்றி படாதிபதியுடன் பேசிக்கொண்டிருந்தேன். இச்சமயத்தில் வெளியிலிருந்து வந்த டைரக்டரும் எங்களுடன் கலந்து கொண்டார். பாலுவும் அங்கு வந்து நின்று கொண்டிருந்தான். படத்தை வாஸந்தி யில்லாமல் எப்படி முடிக்க முடியும் என்பதே எங்கள் கவலையாக இருந்தது.

''ஐயா, என் பெண் எங்கிருக்கிறாள் என்பது உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டவாறு அங்கு வந்தார் ஈஸ்வர மூர்த்தியா பிள்ளை. பித்துப்பிடித்தவர் போலக் காணப்பட்டார்.

''வருவாள் பெரியவரே, கவலைப்படாதீர்கள்'' என்று டைரக்டர் சொன்னார்.

பாலுவைக் கண்டதும் அவர் முகத்தில் ஒரு வெறி தோன்றியது. ''அடப்பாவி, என் மகளைக் கொன்று விட்டாயா எவ்வளவு அருமையாக வளர்த்தேன்! எங்கேடா அவள் இப்போது? சொல்லடா சொல்லு!'' என்று கத்தியவாறு அவனை நோக்கிப் பாய்ந்தார். படாதிபதியும் நானும் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தோம். ''பெரியவரே, என்ன இது?'' என்று கூறியபடி அவரைத் தடுத்து நிறுத்தினார் டைரக்டர். கிழவர் திமிறினார்.

இந்நிலையில் வாசற் கதவு திறந்தது. வாஸந்தி உள்ளே பிரவேசித்தாள்!






*[ஒவ்வொரு நாளும் அநேக அன்பர்கள் கேள்விக் கடிதங்கள் வரைகின்றனர். எல்லாருடைய கேள்விகளுக்கும் ஒரே இதழில் பதில் அளிப்பது எளிதல்ல. ஒரே கேள்வியை அநேக அன்பர்கள் கேட்கின்றனர். ஆகையால், பதில் அளிக்கப்படாத கேள்விகளை நாம் மதிக்கவில்லை என அன்பர்கள் தவறாக நினைக்கவேண்டாம் என்று தெரிவித்துக்கொள்ளுகிறோம். புனை பெயருடன் கேட்கப்படும் கேள்விகளுக்கு விடையளிக்க வியலாது—ஆசிரியர்.]*

**எம். ஏ. கரீம்,**
**கூத்தாநல்லூர்.**

''(நபியே!) இரவின் ஒரு பாகத்தில் உமக்குக் கடமையல்லாத தொழுகையைக் கடைப்பிடித்து வருவீராக. புகழ் மிக்க நிலைமைக்கு உம்மை உமது இறைவன் உயர்த்துவான்' என்று குர்ஆனின் (17 : 79) காணப்படுகிறது.

இரவின் ஒரு பாகத்தில் என்பது எப்பொழுது? அத் தொழுகையின் பெயர் என்ன? அத்தொழுகையைக் கடைப்பிடிப்பதால் மனிதன் புகழ் மிக்க நிலைமைக்கு எப்படி உயரமுடியும்?

**''இரவின் ஒரு பாகத்தில்'' என்று அல்லாஹ் குறிப்பிடுவது வைகறைத் தொழுகைக்கு முன்பும், இரவின் இறுதித் தொழுகைக்குப் பின்பும் என்று கொள்ளப்படுகிறது. இதன் பெயர் ''தஹஜ்ஜத்'' தொழுகை. நள்ளிரவுக்கும் வைகறைக்கும் இடையிலுள்ள நேரத்தில்—இரவு மூன்று மணி முதல் நான்கு மணி வரையில்-இப்பிரார்த்தனையை நடத்த வேண்டும். நபிகள் நாயகம் இதைக் கடைப்பிடித்து வந்தார்கள். இந்த நேரத்தில் விழித்தெழுந்து இறைவனைத் தொழுவதால் ஆன்மிக வாழ்வில் உயர்வெய்தலாம்; அத்துறையில் மக்களின் தலைவர்களாக விளங்கலாம் என்பது அனுபவம் கண்ட உண்மை. விரோதிகள் நம் நபிபிரானை ஊரைவிட்டே விரட்டியடிக்க கங்கணம் கட்டிக் கொண்டிருந்தனர். ஒரு நாள் நபி பெருமான் தமது பிறந்தகத்தை விட்டு ஓடவும் நேர்ந்தது. ஆனால் அவர்கள் எப்படி வெற்றி வீரராகத் தமது ஊருக்குத் திரும்பினார்கள் என்பது உலக வரலாற்றில் ஒரு புதுமை யல்லவா? இப்புதுமை எப்படி நிகழ்ந்தது? உதவியற்ற நிலையில் ஊரை விட்டு ஓடியவர்கள் பதினாயிரம் மக்களுக்குத் தலைமை வகித்துத் தாயகம் திரும்பினார்களே, அதற்கு என்ன காரணம்? பிரார்த்தனைதான். முக்கியமாக இரவில் நிகழ்த்திய இறை வணக்கமே காரணம். இதனால் அவர்கள் ஆத்மிக பலம் பெற்றார்கள். அது ஆயிரமாயிரம் போர் வீரர்களின் தோள்வலிக்கு நிகரானது; வாள் வலிக்கு ஒப்பானது.**

**நாளுக்கு நாள் நபி பெருமான் தமது குறிக்கோளில் வெற்றிக்கு மேல் வெற்றி பெற்ற வண்ணமாகவே இருந்து வந்தார்கள்.**

இதனையே இந்தத் திரு குர்ஆன் உரை உணர்த்துகிறது. இது நபி பெருமான் அவர்களைப் பற்றியே குறிப்பிடுகிறதாயினும் பொதுவாக எல்லா மனிதர்களுக்கும் பொருந்தும். உலகம் ஆழ்ந்த நித்திரையில் மூழ்கி யிருக்கும் இரவு நேரத்தில் விழித்தெழுந்து இறைவனை உண்மையாகவும் உருக்கமாகவும் தொழுது உதவி கோரும் ஒவ்வொருவருக்கும் அவரவர்விரும்பும் நல்லதுறையில் உயர்வு கிடைக்கும் என்று உறுதி கூறுகிறது திரு குர்ஆன்.

இத்தொழுகைக் குரிய நேரம் நிம்மதியானது. மனத்தை ஒரு வழிப்படுத்தவும், மனமுருகப் பிரார்த்தனை செய்யவும் இறைவனுடன் இணைந்து நிற்கவும் இதுவே உகந்த நேரம் என்பதில் சந்தேகமில்லை.

**எஸ். எம். ராமச்சந்திரன், மதுரை.**

*கிறிஸ்துவப் பெண்களையும் யூதப் பெண்களையும் முஸ்லிம்கள் விவாகம் செய்து கொள்ளலாம். ஆனால் முஸ்லிம் பெண்கள் கிறிஸ்துவர்களையோ அல்லது யூதர்களையோ திருமணம் செய்து கொள்ளக் கூடாது என்று இஸ்லாம் கூறுகிறது. இஸ்லாம் பகுத்தறிவுக்குப் பொருத்தமான மதம் என்று சொல்லுகிறீர்கள். ஆனால் இஸ்லாத்தில் இப்படி ஒரு சட்டமிருக்கிறது பகுத்தறிவுக்குப் பொருத்தமில்லாமல்! முஸ்லிம் பெண்கள் வேதமுடைய வேறு சமய ஆடவரை மணக்கலாகாது என்பதற்கு அறிவுக்குப் பொருத்தமான காரணம் கூறவேண்டும். எங்களின் பெண்கள் பிறமத ஆடவருக்கு வாழ்க்கைப்பட்டால் அவர்களின் சொத்துரிமையும் சமத்துவமும் பறிபோகிறதென்பதெல்லாம் பழைய வாதங்கள். அவைகளையே இசைத் தட்டு மாதிரி நீங்களும் திருப்பிப்பாட வேண்டாம்.*

புதிய காரணம் வேண்டும்! அறிவுக்குப் பொருத்தமான ஆதாரம் வேண்டும்! சரி. சொல்லுகிறேன். முஸ்லிம்கள் உலகில் தோன்றிய எல்லா நபிமார்களையும் நம்புகிறார்கள். நம்பவேண்டுவது அவர்களின் கடமை நம்பாவிட்டால் அவர்களின் ஈமான் (நம்பிக்கை) பூர்த்தியாகாது. உண்மையான முஸ்லிமாக இருக்க முடியாது. ஆனால் கிறிஸ்துவர் யூதர் போன்றவர்கள் எமது திரு நபியவர்களை நம்புவதில்லை. நபி அல்லது தீர்க்கதரிசி என்று ஒப்புக் கொள்வதுமில்லை. முஸ்லிம்கள் பிற மதத் தலைவர்களைப் போற்றிப் புகழ்கிறார்கள்; அவர்களுக்கு வாழ்த்துக் கூறுகிறார்கள்; மரியாதையும் செலுத்துகிறார்கள். ஆனால் மற்ற சமயத்தினர் இப்படிச் செய்தாலும் செய்யாவிட்டாலும் அது அவர்களுக்குக் கடமையுமில்லை, கட்டாயமுமில்லை. ஆனால் பிறமதத் தலைவர்களுக்கு—தீர்க்கதரிசிகளுக்கு மரியாதை செலுத்துவது முஸ்லிம்களின் தலையாய கடமைகளில் ஒன்று. எனவே பிறமதப் பெண்கள் முஸ்லிம்களின் வீடுகளுக்கு வந்தால அவர்களின் நபிகள் அந்த வீட்டிலுள்ள மற்றவர்களின் சொல்லாலும் செயலாலும் கௌரவிக்கப்படுவதைக் கண்டு மகிழ்வார்கள்; குடும்பத்தில் ஒற்றுமையாக வாழவும் வழியுண்டாகும். ஆனால் முஸ்லிம் பெண்கள் பிறமத ஆடவரை மணந்து அவர்களின் வீட்டுக்குச் சென்றால் என்ன நடக்கும்? அவர்களின் உயிருக்கு உயிரான திருநபியவர்களின் பெயர் கூறப்படும்போது அதற்குரிய மரியாதையும் கண்ணியமும் அளிக்கப்படமாட்டா. அதைக் காணும்போது அந்த முஸ்லிம் பெண்ணின் மனம் வேதனையடையும்; வெந்து வெந்து உருகும். மனக்கசப்பு ஏற்படும். குடும்பத்தில் ஒற்றுமை நிலவாது. குடும்ப வாழ்க்கை ஒரு பூஞ்சோலையாக இருக்க வேண்டுமென்று இஸ்லாம் விரும்புகிறது. அதற்கு அடிப்படையான அன்பு நிலை பெறுவதற்கு இரு சாராரிடமும் பரஸ்பர மரியாதையும் கண்ணியமும் பரிமாறிக் கொள்ளப்பட வேண்டும் முஸ்லிம்களுக்கு அவர்களின் உயிர்களை விட மேலானவர் முஹம்மது நபி (ஸல்). அவர்களின் பெயர் சொல்லப்படும்போதெல்லாம் அதனை முஸ்லிம்கள் மிக்க மரியாதையுடன் நினைவு கூருவார்கள், இது அவர்களின் கடமை. இதேவிதமாக மற்ற நபிமார்களின் பெயர்கள் கூறப்படும்போதும் அவைகளுக்குரிய மரியாதை செலுத்துகின்றனர். இதனை மற்ற சமயத்தினரிடம் எதிர்பார்க்க முடியாது அது அவர்களுக்கு ஒரு கடமையுமல்ல. முஸ்லிம் பெண்கள் பிற மத ஆடவர்களை மணக்கக் கூடாதென்பதற்கு இதுதான் முக்கியமான காரணம்.

**டி. ஏ. ரஹ்மான், கொழும்பு.**

*“மனிதர்களில் நன்னடக்கையுடையவர்கள் யார் என்பதைப் பரிசோதிப்பதற்காகவே பூமியிலுள்ள பொருள்களையெல்லாம் அதற்கு அலங்காரமாக்கினோம். இல்லாவிட்டால் அந்த அழகுப் பொருள்களையெல்லாம் அழித்திருப்போம்” என்று ஆண்டவன் குர்ஆனில் (18 : 7,8) கூறுகிறான் ஆண்டவன் அழகான உலகப் பொருள்களைக் கொண்டு மனிதர்களைப் பரிசோதிப்பது எப்படி?*

இவ்வுலக இன்பங்கள் எக்காலமும் நிலையானவையல்ல என்ற உண்மையை மனிதர்கள் உணர்ந்து, அவைகளை அளவோடு அனுபவித்து நன்மையான காரியங்களைச் செய்யவேண்டும் என்பதே இதன் கருத்து ஆயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு அரேபியப் பாலைவனத்தில் வாழ்ந்த அஹ்மத் நபியவர்களுக்கு அழகும் ஆடம்பரமும் தாண்டவமாடும் இன்றைய அமெரிக்காவைப்பற்றி ஆண்டவன் அறிவித்துள்ளான்! ‘பியூக்’கும் ‘காடிலாக்’கும் மனித இதயங்களைக் கவர்ந்து விடுகின்றன; மேலான எண்ணங்களுக்கும் செயல்களுக்கும் இடமில்லாமற் போகின்றன. ஆடம்பர வாழ்வினூடே மனிதன் அறநெறியிலும் செல்லுவது ஒரு கடுமையான சோதனையல்லவா? உலக இன்பங்களில் ஓரேயடியாக மூழ்கி, விட்டில் பூச்சிகளைப்போல் மடியும் ஆயிரமாயிரம் மனிதர்களை நாம் காணவில்லையா? இப்படித்தான் மனிதர்கள் உலக இன்பங்களைக் கொண்டு பரிசோதிக்கப்படுகின்றனர். இதில் நாம் தேறுகின்றோமா அல்லது தவறுகின்றோமா என்று பரிசோதிப்பதற்காகவே பாலைவனம் மட்டுமின்றி, பாரிஸ் நகரம் போன்ற பகட்டான பொருள்களும் இவ்வுலகில் இருக்கின்றன என்று இறைவனால் திரு குர்ஆனில் கூறப்படுகின்றது.

**வி. ஏ. பக்கீர் முஹம்மது, லால்பேட்டை.**

*“ஆதமின் குழந்தைகளே! ஒவ்வொரு தொழுகையின்போதும் உங்களை அலங்கரித்துக்கொள்ளுங்கள்” என்று திரு குர்ஆன் நாட்குறிப்பில் (மே 22-ந் தேதி) காணப்படுகிறது. எப்படி அலங்கரித்துக்கொள்வது? தலையில் கிராப் வைத்துக்கொள்வதுதான் அலங்காரமென்று சிலர் கருதுகிறார்கள். கோட்டும் பூட்டும் அணிந்து கொள்வதே அழகென்று வேறு சிலர் நினைக்கின்றனர். அல்லாஹ் குறிப்பிடுவது எத்தகைய அலங்காரம்?*

“அலங்கரித்துக் கொள்ளுங்கள்” என்பதை “அழகுபடுத்திக் கொள்ளுங்கள்” என்றும் கூறலாம். வெற்றுடம்புடனோ அல்லது அழுக்கான உடை யுடுத்திக்கொண்டோ தொழுவது விரும்பத்தக்கதல்ல. அவரவர் வசதிக்கு ஏற்ப தூய்மையான, அழகான உடை யுடுத்திக் கொண்டு தொழவேண்டும். வெள்ளிக் கிழமைத் தொழுகையிலும், பெருநாட் தொழுகையிலும் கலந்துகொள்ளுவதற்காக முஸ்லிம்கள் பள்ளிவாசலுக்குப் போகுமுன் அவர்கள் குளித்து விட்டு,

சிறந்த ஆடைகள் அணிந்து நறுமணத் தைலம் பூசிக்கொண்டு 'செல்ல வேண்டும்' ஆனால் இந்த வெளியலங்காரங்களை மட்டுமே குர்ஆன் குறிப்பிடவில்லை. மனிதர்களின் உள்ளத்திலே ஒரு ஒளியும் அழகும் துலங்க வேண்டும். ஆன்மாவுக்கு அழகும் ஒளியும் தரக்கூடியதுதான் தொழுகை. எனவே. "இருதயத்தின் அழுக்குகள் எல்லாம் நீங்கிய நிலையில் அதியுன்னத இலட்சியத்துடன் ஆண்டவனைத் தொழுது கொள்ளுங்கள்" என்று அறிவுறுத்தப்படுகிறது.

**எம். எச். ஜாபர்,**
**திருச்சிராப்பள்ளி.**

"கன்வென்ஷன்" என்றால் என்ன அர்த்தம்?

கூட்டம். மகா நாட்டுக்கு மற்றொரு பெயர் / பெரிய தலைவர்களை அழைத்து, சிறிய கூட்டத்தைக் காட்டி, "இவர்கள்தான் இலட்சக்கணக்கான மக்களின் பிரதி நிதிகள்" என்று நம்பச் செய்து நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளும் அரசியல் தந்திரம்!

சென்னையில் நடைபெற்ற தென்னிந்திய முஸ்லிம்களின் மகா நாட்டுக்கு "கன்வென்ஷன்" என்ற பெயர் எப்படிப் பொருந்தும்?

நன்றாகப் பொருந்தும். கன்வென்ஷன் என்பது ஒரு பெரிய கூட்டமாகவும் இருக்கலாம்; சிறிய கூட்டமாகவும் இருக்கலாம். தேனாம்பேட்டையில் மத்திய மந்திரியின் தலைமையில் கூடிய கூட்டத்துக்கு "கன்வென்ஷன்" என்று கூறுவது மிகப் பொருத்தமாக இருக்கும்.



**எம். முஹம்மது காசிம்,**
**சீர்காழி.**

முஸ்லிம் முரசு வெளியிட்டுள்ள 1957 திருகுர்ஆன் நாட்குறிப்பை நான் நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்வது எப்படி?

இரவில் உறங்கப்போகுமுன் ஒரு முறை படிக்கலாம். காலையில் தொழுது முடிந்தவுடன் ஒருமுறை ஓதலாம். நண்பர்களிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லலாம். படிக்கத் தெரியாதவர்களுக்குப் படித்துக்காட்டலாம்.

**எம். ஏ. ஜேபுன்னிஸா,**
**திருச்சி.**

பெண்கள் தங்களின் அழகை அன்னிய ஆண்களுக்குக் காட்டிக் கொள்ளக் கூடாது என்று அறிவுறுத்தும் குர்ஆன் (24.31) உரையில் ஒரு விதி விலக்கும் இருக்கிறது. அதாவது "வெளியில் தெரியக் கூடியவைகளைத் தவிர" மற்றவைகளை மறைத்துக் கொள்ளவேண்டும் என்று சொல்லப்படுகிறது. வெளியில் தெரியக்கூடிய உறுப்புக்கள் எவை?

முகமும் முன் கைகளும் என்று சொல்லலாம். பெண்கள் தொழும் போது அவர்களின் முகமும் முன் கைகளும் தவிர மற்றதெல்லாம் துணியால் மூடப்பட்டிருக்கின்றன. நபிகள் நாயகத்தின் மனைவி ஆயிஷா நாச்சியாரவர்களின் சகோதரி அஸ்மா என்பவர் ஒரு நாள் தமது உடம்பு வெளியில் தெரியக்கூடிய மெல்லிய துணி யுடுத்திக்கொண்டு நபிபெருமான் முன்னிலையில் தோன்றினார். இதைக்கண்டவுடன் நபி பெருமான் சொன்னார்கள்: "ஏ, அஸ்மா! பெண்கள் பருவமெய்தியபின் இதைத்தவிர அவர்களின் எந்த உடலுறுப்பும் வெளியில் தெரிவது ஒழுங்கல்ல" என்று கூறித் தமது கைகளையும் முகத்தையும் காட்டினார்கள்.

**மு. முஹம்மது ஹஸன்,**
**மன்னார்குடி.**

இஸ்லாம் பலாத்காரத்தினால் தான் பரவியதென்று 'பிலிமிந்தியா' ஆசிரியர் பாப்புராவ் அடிக்கடி எழுதுகிறார். இதற்குமாறாக திருகுர்ஆன் நாட்குறிப்பில் ஒரு உண்மையைக் கண்டேன்; "நபியே! விக்கிரக வணக்கமுடையவர்களில் யாரேனும் தம்மைக் காப்பாற்றுமாறு உம்மிடம் வேண்டினால்; அல்லாஹ்வின் உரைகளை அவன் செவி மடுக்கும் வரையில் அவனைக் காப்பாற்றுவீராக. அதன் பின்னரும் அவன் நம்பிக்கைக் கொள்ளாவிட்டால் அவனுக்குரிய பத்திரமான இடத்திற்கு அவனை அனுப்பி விடவும்" என்று ஆண்டவன் கட்டளையிடுகின்றான். அதற்கு மாறாக நபியோ மற்றவர்களோ நடந்திருக்க முடியுமா? இதை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து பாப்புராவ் பட்டேலுக்கு அனுப்பப் போகிறேன்.

அத்துடன் அந்நிய சமயத்தினரான 'சேல்' எனபாரின் விளக்க உரையையும் அனுப்பிவையுங்கள், "அவன முஹம்மதிய மதத்தைத் தழுவிக்கொள்ள விரும்பாவிட்டால பததிரமாக அவனுடைய வீட்டுக்கு அவனை அனுப்பிவைத்துவிடுவீராக" என்று இறைவனின் அன்புக் கட்டளை அஹ்மது நபிக்குப் பிறந்ததாக 'சேல்' துரை எழுதுகின்றார்!

**கா. அப்துல் ஹை, கூடலூர்.**

சென்ற மாதம் சென்னையில் நடைபெற்ற முஸ்லிம் கன்வென்ஷனில் சுமார் எத்தனை முஸ்லிம்கள் கலந்துகொண்டனர்? நீங்கள் அதற்குச் சென்றிருந்தீர்களா?

விசேஷ அழைப்பின்மீது பார்வையாளராகப் போயிருந்தேன். பார்வையாளர் உட்பட சுமார் 500 முஸ்லிம்கள் கன்வென்ஷனில் கலந்து கொண்டனர்.

"கமால்"

S.L.M. Mohideen Lebbai

வெளி வந்துவிட்டது !

# திரு குர்ஆன்
# நாட்குறிப்பு - 1957

[முஸ்லிம் முரசு பாக்கெட் டயரி]

★

1. அரபு, தமிழ், ஆங்கிலம் ஆகிய மூன்று தேதிகள்.
2. இஸ்லாமிய கொள்கை, கோட்பாடுகளின் விளக்கம்,
3. முஸ்லிம்களின் ஐங்காலத் தொழுகைக்கு அவசியமான குர்ஆன் சூராக்கள் தமிழில்.
4. இதன் ஒவ்வொரு தேதியிலும் திருகுர்ஆன் வசனங்களின் தமிழ் மொழிபெயர்ப்பு வியாக்கியான்மின்றி விளங்கத் தக்க முறையில் வரையப்பெற்றுள்ளது. திருகுர்ஆனிலுள்ள பின் வரும் விஷயங்கள் இதில் இருக்கின்றன.

★ பொன்மொழிகள், அறிவுரைகள், திருமணம், விவாக ரத்து, பெண்களின் 'இத்தா' காலம் பற்றிய சட்ட திட்டங்கள்.

★ சொத்துரிமை, வாரிசு உரிமை, பாகப் பிரிவினை பற்றிய இஸ்லாமிய சட்டங்கள்,

★ சண்டையும் சமாதானமும், தொழுகை, நோன்பு ஹஜ்ஜு, 'ஜகாத்'

★ திருகுர்ஆனின் தனிச் சிறப்பு

★ கல்வியறிவின் பெருமை, திருநபியைப் பற்றி அல்லாஹ்.

★ மூமீன்களின் குணாதிசயங்கள், மற்றும் பல.

5. தபால் தந்தி கட்டண விகிதம், வருமான வரி விபரம்.

★ உள்நாடு, வெளிநாடு, புத்தகம், பத்திரிகை, பார்சல், மணி ஆர்டர், சாதாரணத் தந்தி, அவசரத் தந்தி, விமானத் தபால்.

★ ஸ்டாம்ப் டூட்டி, பிராமிஸிரி நோட்,

★ ஸ்வீகாரக் கட்டணம், திருமண விலக்குப் பத்திரம்,

★ பந்தகப் பத்திரங்கள், ரிஜிஸ்டரேஷன் கட்டணம்.

★ வருமான வரி, விகிதம், அமித வரி, மற்றும் பல.

ஒவ்வொரு இஸ்லாமிய ஆண், பெண்

கையிலும் இருக்கத் தகுந்த

அருமையான 'டயரி'




**விலை ரூ. 1-4-0**

ரிஜிஸ்டர் தபாலில் பெற விரும்புவோர்
1—14—0 முன்பணம் அனுப்பவும்
வியாபாரிகளுக்கு 20 சதவீதம் கமிஷன்.

## அன்பு நூல் நிலையம்

18, ராமசாமி தெரு, மண்ணடி,
சென்னை-1.

